KALKI
7-4-85
ரூ.1.50



அடுத்த வாரம்:

வாஸந்தி எழுதும்

மௌனப் புயல்

ஆரம்பம்

# கல்கி

# ரஸ்னா தயாரிப்பது A B C போல அவ்வளவு சுலபம்.
# உண்மையில் இது குழந்தை விளையாட்டு!

குழந்தைகளுக்கு ரஸ்னா என்றால் கொள்ளைப் பிரியம். அதைத் தயாரிப்பது மிகவும் சுலபம். அவர்கள் தாங்களாகவே அதைத் தயாரிக்க முடியும்.

ரஸ்னாவை ஒரு பாத்திரத்தில் கொட்டுங்கள். சர்க்கரையையும் நீரையும்சேருங்கள். இரண்டு பாட்டில் ஸிரப், நொடியில் தயார்.

சேதம் எதுவும் ஏற்படுவதில்லை. ஏனெனில் அந்த ஸிரப்பை எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் சேகரித்து வைக்கலாம். எனவே எப்போது வேண்டுமோ நீங்கள் ரஸ்னாவைப் பருகலாம். உடனடியாக!

ரஸ்னா சிக்கனமானதும்கூட. ஒரு பேக்குக்கு உங்களுக்குக் கிடைப்பதோ 32 டம்ளர் குளிர்பானம் இ
ஸ்குவாஷைவிட இதற்கு பாதிக்கும் குறைந்த செலவுத

மேலும் ரஸ்னா மட்டுமே நாவில் நீர் ஊறும் 9 நறுமணங்
வழங்குகிறது. ஆரஞ்ச், அனாஸி, எலுமிச்சை, காலாகட்டா, மிக்ஸ் ஃப்ரூட், ரோஜா, கசகசா, மசாலா மில்க், மசாலா சோடா.






ரஸ்ன
ஸாஃப்ட் ட்ரிங்க்
கான்ஸென்ட்ரேட்
சுவைமிக்கது
சிக்கனமானது
பல நறுமணங்கள்
கொண்டது.

குவைத், துபாய், பாஹ்ரின், மொரீஷியஸ், கெய்ரோ, கார்டூம், லுஸாகா, நெய்ரோபி, ஜெட்டா, ஓஸ்லோ, லண்டனில்கூட கிடைக்கி

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ், அஸர்வா, அஹமதாபாத்-380 016

Mudra:A:PI:2120



அஞ்ஞான வெறிகள் மனத்தைக்
குருடாக்கும்போது—
விழித்திருக்கும் ஆன்மாவே—
எழுந்திரு
மௌனப் புயலாக.



# நீங்களும் நானும் அவர்களும்

மிக ஆச்சரியமானது மனிதனின் மறதி. சரித்திரத்திலிருந்து அவன் பாடம் கற்காததற்கு இந்த அவனது ஆணவமே காரணம்.

ஆறு மாதங்கள் கூட ஆகவில்லை முழுசாக. ஒரு இளம் காலைப் பொழுது நிர்விசாரமாய், நிராயுதபாணியாய்த் தோட்டத்தில் நடந்த பிரதமரை இரண்டு சீக்கியக் காவலர்கள் நாகரீக மனிதன் புரிந்துகொள்ள முடியாத ஒரு வெறியுடன் மாய்த்ததும்,

அந்த வெறியர்களின் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்கிற காரணத்துக்காகவே ஆயிரக்கணக்கான அப்பாவிச் சீக்கியர்கள் திட்டமிட்டுக் கொல்லப்பட்டதும்,

தில்லி ஜனங்களுக்கே மறந்துவிட்டது. மனித நேயம் மடிந்த அந்த நான்கு நாட்களில் தில்லி எரிவதை ஸ்தம்பித்து, செயலிழந்து, விக்கித்துப் பார்த்த பார்வையாளர்களுள் நானும் ஒருத்தி. அந்தச் சம்பவங்களை நினைத்துப் பார்க்கும் போதெல்லாம் எல்லா நம்பிக்கைகளும் என்னுள் மடிந்து நிஹிலிஸ எல்லைக்குப் போய்விடுகிறேன். பல கேள்விகள் என்னுள் எழுகின்றன. உலகத்து எந்த மூலையிலும் நடந்திராத அத்தனை பயங்கர வன்முறை இங்கு நமது மண்ணில் எப்படி நேர்ந்தது?

முப்பத்து ஏழு வருஷமாக வளர்ந்திருக்கும் ஏமாற்றமா? தீராத ஏழ்மையா? வேலையில்லாச் சோம்பேறித்தனமா? வன்முறையைப் போற்றும் சினிமாவா? இன்றும் தவளைகளாய் வாழும் சின்னத்தனமா? நம்முன் வாழ்க்கை நெறியாகப் போய்விட்ட வெறித்தனமா? அதற்குச் சாதகமாய்ப் போன அரசியலா?

நம்மைவிட இன, மத, மொழி, மாநில வெறி பிடித்தவர்கள் யாருமில்லை. இந்த நமது பலவீனத்தை உபயோகித்துக் கொள்ளக் காத்திருக்கும் கட்சிகள்; மரபுகளாய் மாறிவிட்ட அவற்றின் செயல்கள் — இந்தச் சேர்க்கையினால் நம்மிடையே எத்தனை சுவர்கள்!

ஆச்சரியகரமான விஞ்ஞான வளர்ச்சி பெற்ற கம்ப்யூட்டர் கால கட்டத்தில் நாம் இருக்கையில், 21-ம் நூற்றாண்டில் காலடி வைக்கும் தருணத்தில், எப்படிப்பட்ட பிற்போக்குச் சிந்தனையில் சிக்கியிருக்கிறோம்! என்னுடைய எண்ண ஓட்டத்தின் ஒரு சின்ன வெளிப்பாடு இந்தக் கதை. இந்தக் கதையில் பஞ்சாப் பிரச்னை வரும். அரசியல் இருக்கும். ஆனால் இது வெறும் பஞ்சாப் பிரச்னை இல்லை. வெறும் அரசியல் விஷயம் இல்லை. ஒரு இந்தியப் பிரச்னை இது. உங்களையும் என்னையும், ஒவ்வொரு இந்தியனையும் நேற்றோ இன்றோ நாளையோ பாதித்த, பாதித்துக் கொண்டிருக்கும், பாதிக்கப்போகும் பொதுவான பிரச்னை.

இந்தப் பிரச்னைகளுக்கு, என்னுள் எழும் கேள்விகளுக்கு, என்னிடம் விடைகள் இல்லை. ஆனால் அந்த விடையைத் தேடலே எனக்குப் போதுமானது. இந்த எனது யாத்திரையில் உங்களையும் துணைக்கு வரும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நன்றியுடன்.

—வாஸந்தி.





# வட்டமேஜை

''பழைய பல்லவிகளும்புதிய அனுபவங்களும்'' என்ற தலைப்பில் தங்கள் நிருபர் எழுதியுள்ள விமரிசனத்தைக் கண்ணுற்றேன். இக்கலைவிழா, மத்திய சங்கீத, நாடக அகாடமியுடன் சென்னை சங்கீத வித்வத் சபையும் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றமும் இணைந்து நடத்தியது. அவ்வாறிருக்க தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் பெயரையே தங்கள் நிருபர் குறிப்பிடாதது வருந்தத் தக்கது.

பிப்ரவரி 28—ம் தேதி திரு. முருக கிருபானந்த வாரியார் அவர்களின் இலக்கியப் பேருரைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வாரியார் சுவாமிகள் அன்றைய நிகழ்ச்சியில் கலந்து கொள்ள இயலாமல் போய் விட்டது. எனவே தான் திருமதி சுதாராணி அவர்களின் முழு நாட்டிய நிகழ்ச்சிக்கு ஏற்பாடாயிற்று. இதில் எவ்வித உள் நோக்கமோ, பாரபட்சமோ இல்லை.

இவ்விழாவைக் கண்டுகளிக்க அனுமதிச் சீட்டுக்கள் பொதுமக்களுக்கு வழங்கப்பட்டன. பத்திரிகைகளில் விளம்பரம் செய்து விழா நாட்களுக்குரிய அனுமதிச் சீட்டுக்களைப் பெற்றுக் கொள்ளும்படி கோரியிருந்தோம். அதன்படி வந்து அனுமதிச் சீட்டுக்கள் பெற்றுக் கொண்ட பின்னர் பலர் நிகழ்ச்சிகளுக்கு வராமலே இருந்துவிட்டனர். இதற்கு நிர்வாகிகள் எப்படிப் பொறுப்பாக முடியும்? டிக்கட்டுகள் விநியோகத்தில் எவ்விதக் குளறுபடியும் இல்லை.

சென்னை—20, கே. எல். ராமன்.
துணைக்காரியதரிசி, தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம்.

* தராசு பதிலில் ஸ்பாட் பில்லிங் அறிமுகத்திற்குப் பிறகு டெபாஸிட்டுக்கு வட்டி கழித்துப் பில் போடுகிற பழக்கத்தை மின் வாரியம் கைவிட்டுவிட்டதாகக் கூறியுள்ளீர்கள். மேட்டூர், சேலம் மின் திட்டங்களில் ஸ்பாட் பில்லிங் செய்வனே நடந்து ஐ.எஸ்.டி கழிக்கப்பட்டு வருகிறது. அப்போது மின் நுகர்வோர் அடையும் சந்தோஷத்தை நேரில் பார்த்துத்தான் ரசிக்க வேண்டும்!

இராசிபுரம். இரா. சம்பத்குமார்

(இதே போன்றதொரு கடிதத்தை மயிலாடுதுறை கே. ரகுபதியும் எழுதியுள்ளார். ஆனால் தராசுவைப் பொறுத்தமட்டில் இதுவரை ஏமாற்றம்தான் — ஆர்.)

* ''வெற்றி சேவை வெற்றி'' என்ற கட்டுரை மூலம் திரு. வி. எஸ். வி. மணி, பாங்க் ஆஃப் தமிழ்நாடு சேர்மன் பதவியிலிருந்து ஓய்வு பெறுகிறார் என அறிந்தேன். சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் நான் பாண்டியன் பாங்க், மதுரை வடக்குக் கிளையில் பயிற்சியாளனாகச் சேர்ந்த போது திரு. மணி அவர்கள் தான் கிளை அதிகாரி. அவர் அளித்த பயிற்சியும், அறிவுரைகளும் என்னால் மறக்க முடியாதவை. அவற்றை இன்றும் கடைபிடிப்பதோடு என்னுடன் வேலை செய்பவர்களுக்கும் புதிதாக வருகிறவர்களுக்கும் நாள்தோறும் சொல்லி வருகிறேன்.

சென்னை—8, ரா. சோமநாதன்
சீனியர் மானேஜர், கனரா பாங்க்.

* ''இன்னஸ் புத்தகத்துக்குச் சில சிபாரிசுகள்'' என்ற தலைப்பில், ''முதல்வரின் பாதங்களை தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொள்கிற அமைச்சர்களை உலகில் வேறு எந்த அமைச்சரவையிலும் காண முடியாது' என்று தமிழக அமைச்சர்கள் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஆனால் மகாராஷ்டிரத்திலும் பதவிப் பிரமாணம் முடிந்ததும் முதல்வர் பாடிலின் பாதங்களைத் தொட்டுக் கும்பிட்ட அமைச்சர்கள் உண்டு. இந்தப் பழக்கத்தில் தாங்கள் காணும் தவறு என்ன என்று புரியவில்லை?.

பம்பாய்—25, கே. சுந்தரேசன்.

('தவறு' என்று எங்கே சொன்னேன்? ஒரு தனித் தன்மையைக் குறிப்பிட்டிருந்தேன். மிக அதிகமான தடவை முதல்வர் பாதங்களில் விழுந்து கும்பிடும் சாதனையில் தமிழக அமைச்சர்களுடன் மகாராஷ்டிர மாநில அமைச்சர்களும் போட்டி போடுவதை அறிந்து மிக்க மகிழ்ச்சி. — ஆர்.)

* சில நாட்களுக்கு முன், எங்கள் வீட்டுக்கு அடுத்தாற் போல் உள்ள ஒரு தொடக்கப் பள்ளியில், முதல் வகுப்பில் படிக்கும் ஒரு சிறு பெண்ணை அப்பெண் தூங்கிக் கொண்டிருந்ததால் கவனியாமல் ஆசிரியர்கள் கதவைப் பூட்டிக் கொண்டு சென்று விட்டனர். மாலை ஆறரை மணிக்கு மேல் யதேச்சையாகக் குழந்தையின் அழு குரல் கேட்டு அதற்கு விடுதலை தர ஆவன செய்தேன். பால் மணம் மாறாத குழந்தைகளை கூட இந்நாளில் பள்ளிக்கு அனுப்புகிறார்கள். எனவே, எல்லாப் பள்ளிகளிலும், தலைமை ஆசிரியர் பள்ளி முடிந்த பின் அனைத்து வகுப்புகளையும் நன்றாகப் பார்த்து விட்டுக் கதவை பூட்டுவதில் கவனமாய் இருக்க வேண்டும்.

மன்னார்குடி. ஜே. சரஸ்வதி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது).

## உள்ளே குழந்தை வெளியே பூட்டு

அடுத்த வாரம்:

# கல்கி இளைஞர் சிறப்பிதழ்



பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த இளைஞர் அணிகளின் தலைவர்கள் இளைஞர் சமுதாயத்தின் இன்றைய நிலை, எதிர்காலம் பற்றி நிகழ்த்தும் சுவையான கலந்துரையாடலுக்குத் தலைமை வகித்துத் தொகுப்புரை வழங்குபவர் நாடாளுமன்ற துணை சபாநாயகர் திரு தம்பிதுரை.



## சுஜாதா

எழுதும்

## இப்படி ஒரு மாறுதல்

குறுநாவல்

## கவிஞர் வைரமுத்து

## வாரம் ஒரு கடிதம்

இளைஞர்களுக்கு எழுதுகிறார்





## டைரக்டர் கே.பாலசந்தர்

வாசகர்களின் கேள்விகளுக்கு அளிக்கும் பதில்கள்

அதிக பக்கங்கள்: அதே விலை.

இளைஞர்களைப் பற்றிய சுவையான தகவல்கள்
இளைஞர்களுக்குப் பயன்தரும் புதுமை அம்சங்கள்.




சூ, மந்திரக்காளி!
இலங்கைப் பிரச்னை
தீர்ந்தது பார்!


வன்முறையை நிறுத்துவோம்!
பண்டாரி




வெறக்கே 99 கோடி எரிசாராய ஊழல்! அக்கிரமம்!. அநியாயம்!
இ. காங்கிரஸ் தேர்தல் தோல்வி
பங்காரப்பா


ப.உ.ச.


இன்னுமா மந்திரியா இருக்க விரும்புறீங்க?
செய்தி
ப.உ.ச. வீட்டில் விசாரணை
ப.உ.ச. மீது வழக்கு




# கல்கி

1985 ஏப்ரல் 7

மலர்: 43 இதழ்: 36

ரக்தாக்ஷி பங்குனி 25




# முதுகில் குத்தாதீர்கள்!

குஜராத்தில் பெற்றோர்களின் ஒத்துழைப்புடன் மாணவர்கள் நடத்திய போராட்டமும் அதைத் தொடர்ந்து நிகழ்ந்து விட்ட வன்முறைச் சம்பவங்களும் பாரத தேசம் முழுமைக்குமே ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பிற்படுத்தப்பட்டோருக்கென்று ஆரம்ப காலத்தில் செய்யப்பட்ட இட ஒதுக்கீடுகளை நியாயமென்று ஏற்பதானாலும் கடந்த முப்பத்தெட்டு ஆண்டுகளில் அது படிப்படியாகக் குறைந்து வந்திருக்க வேண்டும். கல்வி, உத்யோகம், பதவி உயர்வு முதலியவற்றில் அவர்களுக்குக் காட்டப்பட்ட சலுகைகள் காரணமாக அவர்கள் முன்னேறி, 'இனிச் சலுகைகள் தேவையில்லை' என்று கூறும் நிலையை அவர்கள் அடைந்திருக்க வேண்டும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக நமது அரசாங்கம் அவர்களுக்கு இடம் ஒதுக்குவதில் மட்டும் கவனம் செலுத்தியதே தவிர, சிறப்புக் கல்விப் பயிற்சி, தொழிற் பயிற்சி முதலியன அளித்து அவர்களை முன்னேற்றுவதில் போதிய சிரத்தை காட்டவில்லை. எனவே பிற்படுத்தப்பட்டோர் கணிசமாக முன்னேறாதது மட்டுமல்ல, பிற்படுத்தப்பட்டோரின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது. ''எங்களையும் பிற்படுத்தப்பட்டோரென அறிவியுங்கள்'' என்று பல பிரிவினரும் கோரிக்கை எழுப்பி, கிளர்ச்சி செய்து, வெற்றியும் கண்டிருக்கின்றனர். இதன் உடன் விளைவாகக் கல்வி நிலையங்கள், அரசு உத்யோகங்கள், பதவி உயர்வுகள் முதலியவற்றில் பிற்பட்டோருக்கென ஒதுக்கப்படும் இடங்களும் அதிகரித்துக் கொண்டே வந்து, இன்று மெய்யான திறமையின் அடிப்படையில் போட்டி போடுவோருக்கென ஐம்பது சதம் இடங்களே உள்ளன. இந்த ஐம்பது சதத்திலும் திறமை அடிப்படையில் பிற்படுத்தப்பட்டோர் போட்டியிடலாம் என்றும் உள்ளது. இதனாலெல்லாம் தான் முன்னேறிய வகுப்பினர் என முத்திரை பெற்றவர்கள் முதுகில் குத்தப் படுவதாக எண்ணுகிறார்கள். மனம் நொந்து, குமைந்து கடைசியில் பொறுக்க முடியாதுபோய் இட்ஒதுக்கீடுகளுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர் ஆமதாபாத்திலே. அவர்கள் கோரிக்கைகளுள், 1. இட ஒதுக்கீடுகள் படிப்படியாகக் குறைந்து திறமைக்கு அளிக்கப்படும் மதிப்பு படிப்படியாக உயர வேண்டும் என்பதும், 2. ஒருவருக்கு வாழ்க்கையில் ஒரு முறைதான் பிற்படுத்தப்பட்டோருக்கான சலுகை வழங்கப்பட வேண்டும் என்பதும், 3. இச்சலுகை குடும்பக்கட்டுப்பாடு திட்டத்துடன் இணைக்கப்பட்டு மூன்றாவது குழந்தைக்குச் சலுகை கிடையாது என்று ஏற்படுத்தப்பட வேண்டும் என்பதும் நியாயமானவை.

இவர்களது இந்தக் கோரிக்கைகளை எதிர்ப்பவர்கள் ஒருபுறம், இந்த மோதலுக்கிடையில் சுய ஆதாயம் தேடி வன்முறையில் இறங்கும் சமூக விரோதிகள் மறுபுறம் என்று நிலைமை கட்டுக்கடங்காமல் போய் இறுதியில் ராணுவத்தையே அழைக்கும்படியாகி விட்டது.

ஆமதாபாத்துக்கு விஜயம் செய்த பிரதமர், தமது தாயார் பாணியில் எதிர்க்கட்சிகளின் பேரில் பழி சுமத்திவிட்டுத் திரும்பிவிட்டார். பரஸ்பரம் ஆளும் கட்சியும், எதிர்க்கட்சிகளும் ஒருவர் மீதொருவர் பழியைப் போடுவதால் பிரச்னை தீரப் போவதில்லை. இரு சாராரும் இணைந்து தேசிய உணர்வுடன் பரிகாரம் காண முயல வேண்டும். அந்தப் பரிகாரம் பொருளாதார அடிப்படையை மட்டுமே அளவுகோலாகக் கொண்ட சலுகைகளைத்தான் இறுதி லட்சியமாகக் கொண்டிருக்கவும் வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

# வங்கிகளின் வங்கி

ஏப்ரல் முதல் தேதி என்பது அகில உலக முட்டாள்கள் தினமாகக் கொண்டாடப்படுகிறது.

ஆனால் இந்தியாவுக்கு இந்த வருடம் இந்த நாள் இன்னொரு விதமாகவும் முக்கியத்துவம் வாய்ந்தது... 1985—ம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியுடன் இந்திய ரிசர்வ் வங்கிக்கு ஐம்பது வயது நிறைவு பெறுகிறது.

இந்திய ரிசர்வ் வங்கியின் செயல்படு பரிமாணம் மிகவும் விரிவானது. உலகின் எந்த நாட்டு மத்திய வங்கியும் இந்த அளவுக்கு விரிவாகச் செயல்படவில்லை.

1935—ம் ஆண்டு ரிசர்வ் வங்கி ஓர் பங்குதாரர் வங்கியாக ஏற்படுத்தப்பட்டு இந்தியாவின் அதிகாரப்பூர்வமான மத்திய வங்கியாகச் செயல்படத் தொடங்கியது. ஒரு பங்கு ரூ. 100/— வீதம் 5 லட்சம் பங்குடன் 5 கோடி ரூபாய் மூலதனமாகக் கொண்டு ரிசர்வ் வங்கி தொடங்கப்பட்டது. இந்த 5 லட்சம் பங்குகளில் 4 லட்சத்திற்கு மேல் பொது மக்கள் உடைமையாக இருந்தது. மீதி அரசின் வசம்...

இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு 1949—ம் ஆண்டு ஜனவரி முதல் தேதி இந்திய அரசு ரிசர்வ் வங்கியை தேசிய மயமாக்கிப் பொது மக்களிடமிருந்த பங்குகளை ரூ. 100/— மதிப்புள்ளதை ரூ. 118 அணா 10 கொடுத்து வாங்கியது.

ரிசர்வ் வங்கியின் விரிவும் துரித முன்னேற்றம் இதன் பிறகுதான்.

வங்கிகளின் வங்கி, அரசின் வங்கி, பணப் புழக்கப் பராமரிப்பு, ரூபாய் நோட்டு அச்சடிப்பு, அன்னிய செலாவணி பராமரிப்பு, அரசுக்கும், வங்கிகளுக்கும் கடனளிப்பதில் உதவி, ஆகிய அடிப்படைச் செயல்களுடன் பலவித வளர்ச்சிப் பணிகளில் ரிசர்வ் வங்கி ஈடுபட்டுள்ளது.

**வளர்ச்சிப் பணிகள்**

தேசியமாக்கப்பட்ட வங்கிக் கிளைகளை நாட்டில் பல பாகங்களில் தோற்றுவிக்க உதவியது. விவசாயத் துறைக்கு பலவிதங்களிலும் உதவ தேசிய விவசாய வங்கியைத் தோற்றுவித்தது. ஏற்றுமதி, இறக்குமதிக்கு உதவ ஓர் வங்கியை (**Exim Bank**) ஏற்படுத்தியது. நாட்டின் சேமிப்பை அதிகரிக்க யூனிட் ட்ரஸ்ட் உருவாக்கியது. தொழிற்சாலைகளுக்கு உதவ **Industrial Development** வங்கியைத் தோற்றுவித்தது. வங்கிகள் அளிக்கும் கடனுக்கு உத்தரவாதமும், வங்கிகளில் பொதுமக்கள் வைக்கும் டெபாசிட்களுக்கு இன்ஷூரன்ஸ் பாதுகாப்புப் பெறவும் **Deposit Insurance And Credit Guarantee Corporation** ஏற்படுத்தியது. கிராமங்களில் பரவிக் கிடக்கும் முறையற்ற லேவாதேவியையும், மிக அதிகமான வட்டி விகித முறையற்ற கடன்களை ஒழிக்கவும் **Regional Rural Bank** என்ற சிறு வங்கிகளை நாடு முழுக்க ஏற்படுத்தி விவசாயத் துறைக்கு உதவுகிறது. இவையெல்லாம் ரிசர்வ் வங்கியின் வளர்ச்சிப் பணிகளில் அடங்கும்...

ரிசர்வ் வங்கியின் நிர்வாகத்தை ஒரு கவர்னர், 4 உதவி கவர்னர்கள், 15 டைரக்டர்கள் கொண்ட ஓர் குழு கவனித்துக் கொள்கிறது. இவர்கள் மத்திய அரசால் நியமிக்கப்படுபவர்கள். ஆனாலும் சில கொள்கைச் செயல்பாடு முறைகளுக்கு உட்பட்டுச் சுதந்திரமாகச் செயல்பட இக்குழுவுக்கு

சென்னை ரிஸர்வ் வங்கியின் தோற்றம்.





இன்றைய கவர்னர் ஆர். என். மல்ஹோத்ரா.

அதிகாரம் உண்டு. இத்துடன் சென்னை, பம்பாய், கல்கத்தா, டெல்லி ஆகிய நான்கு இடங்களில் உள்ள பிராந்தியக் குழுக்கள் உதவுகின்றன. இந்தியாவில் மொத்தம் 22 ரிசர்வ் வங்கி அலுவலகங்கள் உள்ளன. தலைமையகம் பம்பாயில்.

### தேஷ்முக் ஒருவரே...

ரிசர்வ் வங்கியில் தனி நபர் கணக்கு வைத்துக் கொள்ள முடியுமா என்பது பலருடைய கேள்வி. இயலும்... எந்த ஒரு தனி நபரும் ரிசர்வ் வங்கியில் கணக்கு வைத்துக் கொள்வதைத் தடுக்க முடியாது. ஆனால் கடுமையான விதிமுறைகள். முக்கியமாக வட்டி கிடையாது! ரிசர்வ் வங்கியின் இந்த ஐம்பது வருடத்தில் கணக்கு வைத்திருந்த ஒரே நபர் அதன் முதல் இந்திய கவர்னர் திரு. சி. டி. தேஷ்முக் ஒருவர் மட்டுமே!

ரூபாய் நோட்டு அச்சடிப்பின் முழுப் பொறுப்பு ரிசர்வ் வங்கியிடம் உள்ளது.

பலருக்கும் தெரியாத ஒரு விவரம்: ஒரு ரூபாய் நோட்டுகள், ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் மற்றும் உயர் மதிப்பு நாணயங்கள் ஆகியவை மத்திய அரசின் பொறுப்பு ஆகும். ஒரு ரூபாய்க்கு உட்பட்ட சிறு நாணயங்களும் இதில் அடங்கும்... இரண்டு ரூபாய்க்கு மேற்பட்ட நோட்டுகளின் பொறுப்பு ரிசர்வ் வங்கியைச் சேர்ந்தது. 2, 5, 10, 20, 100, 500, 1000, 5000, 10,000 ஆகிய ரூபாய் நோட்டுக்களை அச்சடித்துப் புழக்கத்தில் விட ரிசர்வ் வங்கிக்குச் சட்டம் இடம் அளிக்கிறது. இதில் ரூ. 500/- நோட்டு மட்டுமே இதுவரை அச்சடிக்கப்படவே இல்லை! முன்பு புழக்கத்தில் இருந்த ரூ. 1000/-, ரூ. 5000/-, ரூ. 10,000/- ஆகிய நோட்டுகளை 1978-ம் ஆண்டு ரிசர்வ் வங்கி ஆலோசனையுடன் மத்திய அரசு செல்லாததாக அறிவித்தது.

அச்சடிக்கப்படும் ரூபாய் நோட்டுக்குச் சமமான தங்கத்தை வைப்பாக வைத்திருக்க வேண்டும் என்பது பலரது நினைப்பு. இந்த எண்ணம் தவறு. 115 கோடி மதிப்புள்ள தங்க நாணயம், தங்க புல்லியன் மற்றும் ஒரு ரூபாய் நாணயம், அரசு கடன் பத்திரங்கள், அயல்நாட்டுக் கடன் பத்திரங்கள் ஆகியவற்றின் அடிப்படையில்தான் ரிசர்வ்வங்கி கரன்சி நோட்டுகளை அச்சடிக்கிறது. 10 கிராம் தங்கத்தின் விலை ரூ. 84.39 பை என்பது ரிசர்வ் வங்கியின் அதிகார பூர்வமான மதிப்பு. இன்று மார்க்கெட்டில் 10 கிராம் தங்கத்தின் விலை ரூ. 2000/-க்கும் அதிகம்!

### நாணயத் தட்டுப்பாடு

தற்போது நாணயப் புழக்கத்தில் ஏகப்பட்ட தட்டுப்பாடு... பலரும் ரிசர்வ் வங்கியைத் தான் குறை கூறுகின்றனர். ஆனால் இதன் முழுப் பொறுப்பும் மத்திய அரசைத்தான் சாரும். போதிய அளவுக்கு நாணயங்களை ரிசர்வ் வங்கிக்கு மத்திய அரசு 'சப்ளை' செய்யாவிடில் அவற்றைப் பொது மக்களுக்கு அளிக்கும் பொறுப்பிலிருந்து ரிசர்வ் வங்கி விடுபட ரிசர்வ் வங்கி சட்டம் இடம் செய்துள்ளது.

கிழிந்த, நைந்துப் போன பழைய ரூபாய் நோட்டுகள் இன்று புழக்கத்தில் ஏகமாகக் காணப்படுகின்றன. சிதைந்த நோட்டுக்களையும், கிழிந்த, பாழான நோட்டுக்களையும், கருகிய நோட்டுக்களையும், நிறம் மாறிய நோட்டுக்களையும் ஏற்றுக் கொண்டு புதிய நோட்டுக்களைக் கொடுக்கும் பணியை ரிசர்வ வங்கி செய்து வருகிறது. இதற்கான விதிமுறைகள் ரிசர்வ் வங்கியிடம் உள்ளன. இவ் விதிமுறைக்கு மீறிய நோட்டுகளை நிராகரிக்க ரிசர்வ் வங்கிக்கு உரிமையுண்டு.. நிராகரிக்கப்பட்ட நோட்டுகள் திருப்பித் தரப்பட மாட்டாது. பரிசோதனைக்குப் பின் எரிக்கப் படும். இம்மாதிரி பழசை மாற்றிப் புதிய ரூபாய் நோட்டுகள் தருவதை மக்கள் உரிமையாக ரிசர்வ் வங்கியிடம் கேட்க முடியாது. ரிசர்வ் வங்கி மனமிரங்கிச் செய்தால்தான் உண்டு.

### நோட்டு மாற்று வியாபாரம்

இம்மாதிரி நோட்டுகள் மாற்றுவதைப் பல தரகர்கள் ஓர் வியாபாரமாகவே செய்து வருகின்றனர். விதிமுறைகள் அறியாத ஏழை எளியவர்கள், படிப்பற்றவர்கள், ஆகியோரிடமிருந்து இம்மாதிரி பழைய, சிதைந்த

• பம்பாய் ரிஸர்வ் வங்கிக் கட்டிடம்.



கிழிந்த ரூபாய் நோட்டுக்களைக் குறைந்த விலைக்கு வாங்கி, ரிசர்வ் வங்கிகளிடம் சமர்ப்பித்து முழு மதிப்புக்குப் புதிய ரூபாய் பெற்றுக் கணிசமாகப் பணம் சம்பாதிக்கின்றனர்... ரிசர்வ் வங்கியில் எந்த நோட்டு மாறும், எது மாறாது என்று கணிப்பதில் இத்தரகர்கள் நிபுணர்கள்... ரிசர்வ் வங்கி வாசலில் நின்றுக் கொண்டு ரிசர்வ் வங்கி ஊழியரிடமே 'பழைய நோட்டு மாற்ற வேண்டுமா' என்று இவர்கள் கேட்பதை இன்றும் காண முடியும். இம்மாதிரி ரூபாய் நோட்டில் வியாபாரம் செய்வது சட்டப்படி குற்றமாகும்... ஆனால் சென்னை அண்ணா சாலையில் சாந்தி தியேட்டர் அருகே பழைய நோட்டு மாற்றித் தரப்படும் என்று போர்டு போட்டே ஒரு தனி நபர் வியாபாரம் செய்கிறார்...

## அன்னியச் செலாவணி

அந்நியச் செலாவணியை ரிசர்வ் வங்கி எப்படி கட்டுப்படுத்துகிறது என்பது ஓர் சுவையான விஷயம்.

பொருள்களை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து அன்னியச் செலாவணியைச் சம்பாதிப்பதில் ரிசர்வ் வங்கி எவ்விதத் தடையும் விதிப்பதில்லை. ஆனால் ஏற்றுமதியினால் வரும் அந்நியச் செலாவணி முழுவதையும் ரிசர்வ் வங்கிக்குக் கணக்குக் காட்டி ஒப்படைத்துவிட்டு அதற்குச் சமமான இந்திய ரூபாயைப் பெற்றுக் கொள்ள வேண்டும்... அன்னியச் செலாவணியைக் கொண்டு பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவும் கடுமையான நிபந்தனைகள் உண்டு. அன்னியச் செலாவணி சம்பந்தப்பட்ட எந்தவொரு இறக்குமதியும் ஒரு குறிப்பிட்ட சிறிய தொகைக்கு மேல் போனால் ரிசர்வ் வங்கியின் முன் அனுமதியைப் பெற்றாக வேண்டும். மேல்நாட்டுக்குப் படிக்கப் போவோர், வர்த்தக நிமித்தம் செல்வோர், சுற்றுலா போவோர் ஆகிய எல்லாத் தரப்பினரும் அதற்கு நிர்ணயிக்கப்பட்ட அளவு அன்னியச் செலாவணி மட்டுமே பெற்றுச் செல்ல முடியும்...

**'Unauthorised Overdraft'** என்பது சமீப காலத்தில் தினசரிகளில் அடிக்கடி அடிபடும் ஓர் சொல்லாகும்... இது என்னவென்று பார்ப்போம்... மத்திய அரசுக்கு மட்டுமின்றி, மாநில அரசுகளுக்கும் வங்கியாக ரிசர்வ் வங்கி செயல்படுகிறது. ஒவ்வொரு மாநிலமும் ரிசர்வ் வங்கியில் **'Current Account'** வைத்துள்ளது. மாநில வரவுகளும், பட்டுவாடாக்களும் இந்தக் கணக்கு மூலம் நடக்கின்றன. அரசுக்குச் சேர வேண்டிய வருமானம் தாமதமாகலாம். ஆனால் செலவினங்களை உடன் கவனித்தாக வேண்டிய நிலைமை மாநில அரசுகளுக்கு ஏற்படலாம். இதற்காக ரிசர்வ் வங்கி மாநிலங்களுக்குச் சலுகை வழங்கியுள்ளது. கணக்கில் பணம் இல்லாது போனாலும் ஒரு குறிப்பிட்ட தொகை வரை **'Overdraft'** வசதிக்கு உட்பட்டு மாநில காசோலைகள் வந்தால் அதனை ரிசர்வ் வங்கி அனுமதிக்கும். ஆனால் இந்த நிலைமையை ஒரு குறிப்பிட்ட கால வரம்புக்குள் சரி செய்தாக வேண்டும். தவறினால் எச்சரிக்கை... கூடுதல் வட்டி ஆகியவை விதிக்கப்படும்... அப்படியும் நிலைமையை மாநில அரசு சீராக்காது போனால் அந்நிலை **'Unauthorised Overdraft'** எனப்படுகிறது... இந்நிலையில் மாநில அரசுகளின் காசோலைகளைப் பணமில்லை என்று கூறி ரிசர்வ் வங்கி நிராகரித்துவிடக்கூடும். சமீபத்தில் உத்தரப்பிரதேச அரசு இப்பரிதாப நிலைக்கு உள்ளானது. பிரதமரிடம் மாநில அரசு முறையிட்டும் அவர் தலையிட மறுத்து விட்டார்... தற்போது உத்தரப்பிரதேச அரசு; கேரள அரசு, ஆந்திர அரசு; மேற்கு வங்க அரசு ஆகியவை **'Overdraft** விஷயத்தில் முன்னணியில் உள்ளன.

மத்திய அரசும் மாநில அரசுகளும் கடன் பத்திரங்களை வெளியிடும் போது அப்பொறுப்பை ஏற்று நடத்தி வைப்பது ரிசர்வ் பாங்க்தான். வட்டி கொடுத்து, கடைசியில் பத்திரங்களுக்கான கால வரம்பு முடிந்ததும் அசலைத் திருப்பித் தருவதோ அல்லது மாற்றுப் பத்திரங்கள் அளிப்பதோ ரிசர்வ் வங்கியின் பொறுப்பாகும்...

இந்தியாவில் செயல்படும் அத்தனை வங்கிகளையும் மேற்பார்வையிட்டுக் கண்காணிக்க ரிசர்வ் வங்கிக்கு அதிகாரம் உண்டு. ஏதேனும் வங்கி சரியாகச் செயல்படாவிடின் அபராதம் விதிக்கவும், லைசென்ஸை ரத்து செய்யவும் ரிசர்வ் வங்கிக்குப் பூரண அதிகாரம் உண்டு. சமீபத்தில் 'உம்மிடி சாரதி பாங்கர்ஸ்' என்னும் நிறுவனம் பொதுமக்களிடம் இருந்து வாங்கிய **'Fixed Deposit'**களை திருப்பித் தரத் தவறியதால் பொதுமக்களுக்கு நேர்ந்த அல்லல்கள் அனைவரும் அறிந்ததே. இதன் பிறகு இதுபோன்ற தனியார் நிதி நிறுவனங்கள் சம்பந்தமாகச் சில கட்டுப்பாடுகளை ரிசர்வ் வங்கி சட்டத்தில் கொண்டு வந்திருக்கிறது.

## சென்னை ரிசர்வ் வங்கி

தற்போதைய கட்டிடத்தில் சென்னை ரிசர்வ் வங்கி செயல்பட ஆரம்பித்து இந்த ஆண்டு ஜனவரியுடன் 25 ஆண்டுகள் ஆகின்றன.

கட்டடம் கட்டப்பட்டபோது ஓர் ஊழியர் உயரத்திலிருந்து விழுந்து இறந்துவிட்டார். இரவில் ரிசர்வ் வங்கியின் சுற்றுப்புறத்தில் அவர் ஆவி உலவுவதாக இன்றும் பலர் நம்புகிறார்கள். 'லிஃப்ட் தானாகப் போகும் சத்தம் கேட்குங்க... பணம் உள்ள வால்ட் பக்கம் இரவிலே சலங்கை சத்தம் திடீர்.... திடீர்னு கேட்குங்க' என்று கூறும் காவல்துறைப் பாதுகாப்பாளர்கள் உண்டு... கண்ணாலேயே பார்த்ததாகச் சத்தியம் செய்வோரும் உண்டு..

ரிசர்வ் வங்கியில் பணிபுரியும் இளவயதுக்காரர்கள் திடீரென்று ஏதோ நோய் வந்து, அல்பாயுசில்

இறந்து போனால் அதற்கு அமானுஷ்ய காரணம் கூறுவோர் இருக்கிறார்கள். 1984-ல் இம்மாதிரி 5 பேர் மரணமடைந்தனர். மூவாயிரம் பேர் வேலை செய்யுமிடத்தில் இதெல்லாம் சகஜம் என்று அமானுஷ்ய காரணங்களைப் பரிகசிப்போர் கூறுவர்.

லஞ்சம்—ஊழல் இல்லாத ஒரு பொதுத்துறை நிர்வாகம் என்ற பெருமை சென்னை ரிசர்வ் வங்கிக்கு உண்டு... சென்னை ரிசர்வ் வங்கி ஊழியர் கூட்டுறவு சொஸைட்டி இந்தியாவிலேயே சிறந்தது என்று பலமுறை பரிசு வாங்கியுள்ளது. இதே நேரத்தில் சென்னை ரிசர்வ் வங்கி ஊழியர் கூட்டுறவு உணவகம் நிர்வாக சீர்கேட்டினால் சமீபத்தில் திவாலானது என்பதையும் குறிப்பிட வேண்டும்!

ராணி மைந்தன், பி. ரங்கநாயகி, ஐராவதம், ஜயரதன், 'ராது' போன்ற புனை பெயர்களில் எழுதும் எழுத்தாளர்கள் சென்னை ரிசர்வ் வங்கியில் பணிபுரிகின்றனர்.

ஹேமா ஆனந்ததீர்த்தன் இங்கு அதிகாரியாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்.

பிரபல டைரக்டர் பி. மாதவன் முன்னாளைய சென்னை ரிசர்வ் வங்கி ஊழியர்.

இந்திய அணிக்காக விளையாடிய பல கால்பந்து வீரர்கள், தேசிய அளவிலான புகழ்பெற்ற கேரம் போர்ட் ஆட்ட நிபுணர்கள் இங்கு பணிபுரிகின்றனர்.

தொழிற்சங்க உட்பூசல் இங்கு மிக மிக அதிகம்... வலது, இடது சாரி கம்யூனிஸ்ட் சித்தாந்தம் கொண்ட இரு கோஷ்டிகள் வரிந்து கட்டிக் கொண்டு நிற்கும். நீதிமன்றத்தில் ஏதாவது வழக்கு இவர்களுக்கு இடையே சதா இருந்து கொண்டிருக்கும்.

ரிசர்வ் வங்கி குடியிருப்பு என்பது ஓர் சொர்க்கம் மாதிரியாக ஊழியர்களிடையே கருதப்படுகிறது... குறைந்த வாடகை... சிறப்பான வசதிகள்...

சக ஊழியருக்குப் பொருளாதார ரீதியாகச் சமாளிக்க இயலாத அளவுக்கு நோய் வருமாயின் தாராளமாக உதவுவதற்கு முன் வரத் தயங்க மாட்டார்கள். சில காலம் முன் மூளைக் கட்டி வந்து மரணத்தின் வாயிலுக்கே சென்றுவிட்ட இளைஞர் அமெரிக்கா சென்று சிகிச்சை பெற்றுப் பூரண குணம் பெற இவ்வூழியர்கள் செய்த உதவியும், பிரார்த்தனையும் மகத்தானது.

கட்டுரை: **'நாயகன்.'**

புகைப்படம்: **மன்னை மூர்த்தி.**

# உங்கள் குழந்தையின் எடை அவனது வயதிற்கேற்றதாக இருக்கிறதா?

அவன் சரியான அளவு தூக்கம் பெறுகிறானா?
அவனுக்கு முதல் பல் எப்போது முளைக்கும்?
அவனுக்குத் தேவையான ஊட்டம் முழுதும் நான் அளிக்கிறேனா?''
அவன் நிலையாக எப்போது உட்காருவான், பிடித்துக்கொள்ளாமல் எப்போது நிற்பான்?

ஒரு ''புதிய தாயின்'' மனதில் தோன்றும் இதுபோன்ற பற்பல கேள்விகளுக்கும் பதில் கிடைக்கிறது கைக்கடக்கமான ஒரு புத்தகத்தில். அதுதான் **''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்.''** உங்களுக்காகவே புதிய ஃபாரெக்ஸ் வழங்கும் இலவச அன்பளிப்பு.

**''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்,''** குழந்தை பராமரிப்பு பற்றிய மிக உபயோகமுள்ள ஏராளமான குறிப்புகள் அடங்கியதாகும். உங்கள் குழந்தையின் உணவு நேரத்தை ஆனந்தகரமாக்க இதில் விசேஷமாக தொகுக்கப்பட்ட 23 சுவை மிக்க ஃபாரெக்ஸ் உணவுக் குறிப்புகளைக் காண்பீர்.

இன்றே உங்களது பிரதிக்கு எழுதவும்.

புதிய

## பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

உடல் நலத்தின் உறைவிடம்–**க்ளாக்ஸோ**

இக்கூப்பனை அனுப்பவேண்டிய முகவரி:
க்ளாக்ஸோ லாபரடரீஸ் (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி எண் 19119 **(FCM-19)** பம்பாய் 400 025.

Glaxo Laboratories (India) Limited, P.O.Box 19119 **(FCM-19)**, Bombay 400 025.

தயவுசெய்து எனக்கு ''குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்'' ஒரு பிரதி அனுப்பி வைக்கவும். தபால் மற்றும் இதர செலவுகளுக்கு இத்துடன் ரூ. 1/-க்கான தபால்தலை இணைத்துள்ளேன்.

பெயர் ______________________

முகவரி ______________________

______________________

CLARION/B/GX/7/203 TAM

# அம்மாவும் நீயே அப்பாவும் நீயே

வெள்ளித்திரை

ரொம்ப நாட்கள் கழித்து ஒரு வித்தியாசமான எஸ். பி. முத்துராமன். ஆறிலிருந்து அறுபதுவரை, எங்கேயோ கேட்ட குரல் வரிசையில் ஒரு அம்மாவும் நீயே அப்பாவும் நீயே.



எல்லோரும் ஹீரோவின் சப்ஜெக்ட், என்று அலைகின்ற நேரத்தில் இந்த எஸ். பி. எம். இப்படி ஒரு ஹீரா சப்ஜெக்டை எடுத்துக் கொண்டிருக்கிறாரே என்று யோசனையாக இருந்தாலும்—உருக்கமாகப் பண்ணியிருப்பதால்—

வேண்டாங்க! நமக்கு எதுக்கு துளையை என்னுகிற பிஸினஸ். பேசாமல் தோசையை விள்ள ஆரம்பிப்போம்!

ஒரு சுதந்திரமான பெண், சுதந்திர பங்கத்தால் முதல் கணவனை ஒரு குழந்தை சகிதம் உதறி இன்னொரு கல்யாணம் பண்ணி, இரண்டாம் கணவன் சிங்மாஸ்டராக மாறிவிட, நாயகிக்குக் குழந்தை ஆசை தலைதூக்க—உள்ளக் குமுறல்கள்தான், உணர்ச்சிப் போராட்டங்கள்தான்.

முக்கியப்பட்ட பாத்திரங்களைப் பற்றிப்பேசினால்—

உள்ளே சமையல் அறையில் கோர்ட்டால் பிரிந்த மகள் கையைச் சீவிக் கொள்வது; அந்தக் குழந்தையின் முகம் பார்க்க வெளியே அம்மா தவிப்பது; குழந்தை கையில் ரத்தம் கண்டு பதறுவது.—சரிதாவுக்காகவே ஒரு காட்சி.

இறுக்கமான ஆனால் சாந்தமான ஒரு முகம். கண்ணியமாக வசனங்கள் என்று ராஜேஷிற்கு வெகு இயல்பான பாத்திரம். வெகு நன்றாக உட்கார்ந்து கொள்கிறார். அதுவும், "மிஸஸ் கோபால், மிஸஸ் கோபால்" என்று நெருப்பு சட்டியை ஒவ்வொரு முறை செருகிச் செருகி எடுக்கும் போதும் சரிதா அல்லாடுவதைப் பார்த்தால், 'அடப்போய்யா, நீயும் உன் பெரிய மனுஷத் தோரணையும்' என்று கத்திவிடலாமா என்று தோன்றும் அளவுக்குச் செய்திருக்கிறார் என்றால்—ம்ம்! இப்போதெல்லாம் ராஜேஷா? கொக்கா?

பஞ்சதந்திர நீதிக்கதை மாதிரி ஒய். ஜி. மகேந்திரன் கதை-அஃ கையாடல் செய்வது சரிதான். அதற்காகத் தற்கொலை அளவுக்குப்போய்—அமுதமாக இருந்திருக்க வேண்டிய கதையை அளவுக்கு மீறிக் கொடுத்துவிட்டதால் விஷம் போல் தெரிகிறது.

கடைசியில் ராஜேஷ் செத்துப் போவதும், சரிதா விதவையாவதும், குழந்தை "அம்மா" என்பதும்—வெகு இயல்பாக நம்முடன் ஒட்டிக் கொண்டு வந்த ஒரு வாழ்க்கை திடீரென்று விலகிப் போய் 'சினிமா' 'சினிமா' என்று கத்த ஆரம்பித்துவிடுகிறது.

# சித்திரமே... சித்திரமே...

கிரிக்கெட்டுக்கு ஒரு அஷருத்தீன் போலத் திரைக்கு இப்போது ஒரு ராஜேஷ்! எந்தப் படத்தில் போய் உட்கார்ந்தாலும் அவர் முகம்தான்.

ஒரு பைத்தியம். அந்தப் பைத்தியம் காதலித்த ஒரு பெண். அந்தப் பெண்ணின் போலீஸ் கணவன். பைத்தியத்தை வைத்துக் காப்பாற்றும் காபரே ஆட்டக்காரி. அந்த ஆட்டக்காரியின் நோயாளி அக்கா. அந்த அக்காவின் உடல் ஊனமுற்ற குழந்தை......

அடேயப்பா. இத்தனைப் பாத்திரங்களை நினைவில் வைத்துக் கொள்வதே பெரிய காரியம். இத்தனைப் பேரையும் சுற்றி ஒரு கதை பின்னியிருக்கிறார்கள், தடாலடிக் குழப்படியாக.

மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பதாகச் சொல்வார்கள். சித்திரமே சித்திரமேயில் அதைத் தான் செய்திருக்கிறார்கள். ஒரு எஸ். பி.யை பந்தாவாக அறிமுகம் செய்வதைப் பார்த்தால், துப்பாக்கி, டுமீல், டுமீல் எல்லாம் இருக்கப் போகிறது என்று நினைத்தால் எல்லாம் பணால். எஸ். பி. யின் குடும்ப விவகாரத்தை அலசோ அலசு என்று அலசி... ம்ஹும். அதற்கு எஸ். பி. எதற்கு? இன்ஸ்பெக்டர் போதாதோ? என்னவோ படம் எடுக்கிறவர்கள் ஆசை. நாம் அதைக் கெடுப்பானேன்.

திலீபன் கோயிலில் அந்த வளையல்களைப் பிடித்து உடைப்பதும், நடிகர் ரஜினி பிடி பற்ற வைத்துக் கொண்டு ஸ்டன்ட் செய்வதும் பரபரப்பான காட்சிகள்தான்.

பாப்பா சின்ன பாப்பா அட்டகாசமான பாட்டு தான். அந்தப் பாட்டில் சில அவுட்டில் குடுமிக்காரரின் குடுமி மட்டும் நீட்டிக்கொண்டு தெரிவதும் ரசிக்க வேண்டிய விஷயம்தான்—

அதற்காக,

புள்ளி கோலம், புள்ளியில்லா கோலம் என்று புரியக் கூடாதென்பதற்காகவே எழுதப்பட்டு அங்கங்கே பாதியில் விழுங்கப்படும் வசனங்கள், வேண்டாத ஒரு ராஜேஷ், மனோரமா, கவுண்டமணி

கதையில் அவ்வளவாய்ச் சம்பந்தப்படாத ஆல் பத்திரி அக்கா, அவள் பெண்—என்று வர்ஜா வர்ஜியமில்லாமல் எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ள முடியுமா என்ன?

—ஜெயமன்மதன்.



# விருந்து வைப்போம்! தொழில் வளர்ப்போம்!



– கி. ராஜேந்திரன் –

தமிழகத்தின் தொழில்துறை வளர்ச்சிக்கு உதவுபடியாக மத்திய அரசு அதிகாரிகளுக்கு விருந்து வைக்கப் போவதாக நமது தொழிலமைச்சர் திரு. ராஜாராம் அறிவித்ததிலிருந்து புதுதில்லியில் ஏகப் பரபரப்பு... எதிர்பார்ப்பு.

கடைசியில் அந்த மகத்தான நாளும் வந்தே விட்டது. திரு. ராஜாராம் புதுதில்லி சென்று தொழில்துறை அமைச்சகத்தின் முக்கியமான சில அதிகாரிகளுக்கு விருந்துக்கு அழைப்புக் கொடுத்துவிட்டு வந்தார். அவர்களும் கண்டிப்பாக வருவதாகச் சொன்னார்கள். ஆனால் குறிப்பிட்ட தேதியில் யாருமே வரவில்லை. ஹோட்டல் சோழாவில் தடபுடலான விருந்து. உண்பார் இன்றி ஊசிக் கொண்டிருந்தது. கவலையுடன் டில்லிக்கு ஃபோன் போட்டுப் பேசினார் அமைச்சர். "வரணும்னு ஆசைதான். ஆனால் சொந்தப் பணத்தைச் செலவழித்துக் கொண்டு வர முடியுமா? விமான டிக்கெட் வாங்கித் தந்தால்தானே வர முடியும்?" என்று டில்லிக்குரல் கேட்டது.

"என்ன ஸார், உங்கள் இலாக்கா செலவில் இன்ஸ்பெக்ஷன், டூர் என்று எதையாவது சொல்லிக் கொண்டு வந்திருக்கப்படாதா?" என்றார் அமைச்சர்.

"அழகுதான். இன்று நடப்பது ராஜீவ் ஆட்சி. நினைவிருக்கட்டும்! விளைவுகளை எண்ணினாலே நடுக்கமாயிருக்கிறது" என்றார் அதிகாரி.

ஏமாற்றத்துடன் யாரும் சாப்பிடாத விருந்துக்குப் பல ஆயிரம் மக்களின் வரிப்பணத்தைக் கொட்டி அழுதுவிட்டு வீடு திரும்பினார் அமைச்சர். ஆனால் அவர் தோல்வியை ஒப்புக் கொள்வதாய் இல்லை. மறுபடி டில்லிக்குப் பறந்து அழைப்பைப் புதுப்பித்தார். இம்முறை ஞாபகமாக விமான டிக்கெட்டுகளையும் தமிழக மக்கள் செலவில் வாங்கித் தந்தார்.

ஹோட்டல் சோழாவில் பிரமாத வரவேற்பு. "விருந்தளித்த வைபவம்" என்று மணியன், அமைச்சர் மாலையிட்டதிலிருந்து விருந்தினர் ஏப்பம் விட்டது வரையில் ஒவ்வொன்றையும் நுணுக்கமாகக் கவனித்து ஆச்சரியப்பட்டுப் போற்றிக் கட்டுரை எழுதி அதனைத் தமது பத்திரிகையில் பிரசுரித்தார். ஒவ்வொரு அதிகாரியையும் மணியன் சிரித்தபடி கைகுலுக்குவது போலவோ அல்லது கட்டி அணைப்பது போலவோ புகைப்படங்கள் தப்பாமல் இடம் பெற்றன.

மக்களின் வரிப்பணம் பல்லாயிரக்கணக்கில் ஏப்பம் விடப்பட்டிருப்பதால் — நிஜ ஏப்பம் — தொழில்கள் தொடங்கச் சீக்கிரமே அனுமதி கிடைத்துவிடும் என்று நம்பிக்கையோடு இருந்தார் ராஜாராம். ஆனால் என்ன ஏமாற்றம்! பல நாட்கள் சென்றும் அனுமதி ஏதும் வரவில்லை.

சளைத்துவிடுவாரா நம் தொழிலமைச்சர்? மறுபடி டில்லிக்குப் படையெடுத்தார். பட்டென்று கேட்டும் விட்டார்.

"நாங்கள் என்ன செய்ய? தொழில் தொடங்கச் சிபாரிசுதான் செய்யலாம். ஆனால் நிதி அமைச்சகம்தானே தொகை ஒதுக்க வேண்டும்? அங்கே உள்ள அதிகாரிகளையும் கவனியுங்கள்" என்று தொழில் அமைச்சக அதிகாரிகள் சொன்னார்கள்.

"பூ! இவ்வளவுதானே?" என்று அந்த யோசனையை உடனே நிறைவேற்றினார் ராஜாராம். விமான டிக்கெட்டுகளையும் வாங்கி அனுப்பினார். இம்முறை டாஜ்கொரமண்டலில் விருந்துக்கு ஏற்பாடு செய்தார். ஆனால் குறித்த நாளில் யாரும் வராதது பெரிய புதிராய் இருந்தது. தமிழக அரசின் டில்லி பிரதிநிதியை ஃபோனில் முடுக்கிவிட்டார். அவர் விசாரித்ததில், அந்த அதிகாரிகள் தத்தம் மனைவிமார்களுடன் வர விரும்





புவதாகவும் மனைவிமார்களுக்கு டிக்கெட் எடுக்காததால் அவர்கள் இவர்களையும் போக அனுமதிக்கவில்லை என்றும் தெரிய வந்தது!

"அட ராமச்சந்திரா!" என்று ஞாபகப் பிசகாகக் கூறிவிட்ட ராஜாராம், உடனே, "புரட்சித்தலைவா" என்று திருத்திக் கொண்டார். "இதை முன்னாடியே அவர்கள் தெரிவித்திருக்கக் கூடாதோ?"

"அதெப்படி ஸார்? மனைவியரைப் பிரிந்து ஜாலியாகச் சென்னையில் ஒரு ஹாலிடே அனுபவிக்கலாம் என்று இவர்கள் யோசனை பண்ணியிருக்கிறார்கள். கடைசியில் ரகசியம் அம்பலமாகிவிட்டது!"

"சரி சரி," என்று மறுபடியும் நடக்காத விருந்துக்குப் பணத்தைக் கொட்டி அழுது விட்டு மீண்டும் நாள் குறித்தார் ராஜாராம். இம்முறை அதிகாரிகளின் மனைவியருக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கியதுடன், டாஜில் விருந்துக்குப் பிறகு சொர்ணமுகியின் நடன நிகழ்ச்சிக்கும் ஏற்பாடு செய்தார். விருந்தும் நடனமும் ஜம்மாக நடந்து முடிந்தன. ஆனால் காரியம் ஒன்றும் நிறைவேறவில்லை!

மனம் தளராமல் மறுபடி டில்லிக்குப் பறந்தார். "என்ன ஸார் இப்படி டபாய்க்கறீங்க?" என்று நேரிடையாகவே கேட்டுவிட்டார்.

"நாங்கள் மட்டும் என்ன செய்ய முடியும்? அயல்நாட்டுக் கூட்டுறவுடன் தொழில்கள் தொடங்க ஆசைப்படுகிறீர்கள். இதற்கு நீங்கள் அயல்தேச விவகாரங்கள் அமைச்சரவை அதிகாரிகளையும் குஷிப்படுத்தி வைப்பது நல்லது" என்று பதில் கிடைத்தது.

'விட்டேனு பார்' என்று ராஜாராம், இம்முறை தனியாக வருகிறார்களா, மனைவிமார்களுடனா என்பதை முன்கூட்டியே தெரிந்து கொண்டு தனியாக வருவோருக்கு ஹோட்டல் பிரஸிடெண்டிலும் தம்பதி சமேதராய் வருவோருக்கு உட்லண்ட்ஸிலும் விருந்துக்கு ஏற்பாடு செய்தார். பிரஸிடெண்டில் விருந்துக்கு முன் விஸ்கி பாட்டில்கள் திறக்கப்பட்டன; விருந்துக்குப் பிறகு நைட் கிளப் நடன சபலங்களுக்குத் தீனி போடப்பட்டன. உட்லண்ட்ஸ் விருந்துக்குப் பின் அரசவைக் கலைஞர் மகாராஜபுரம் சந்தானம் சக்கை போடாகப் பாடினார்.

இவ்வளவுக்குப் பிறகும், நினைத்த காரியம் கைகூடவில்லை! இதற்கிடையில் தமிழகத் தொழில் அமைச்சரை அஜீர்ணம் தாக்கியது. அவருடன் பணியாற்றும் தமிழக அரசு அதிகாரிகளுக்கு வயிற்றைக் கடபுடாவென்றது. "வருகிறவர்கள் ஒரு விருந்துதான் சாப்பிடுகிறார்கள். நாமோ ஒவ்வொரு விருந்தையும் சாப்பிட வேண்டியிருக்கிறது. போதாக்குறைக்கு அவர்கள் வராமல் ஏய்த்து விடுகிற விருந்தையும் ஒரு கைபார்க்க வேண்டியிருக்கிறது" என்று அலுத்துக் கொண்ட போதிலும் கடமையே கண்ணாக மாத்திரைகளை விழுங்கிவிட்டு மறுபடி டில்லிக்குப் பறந்தார் அமைச்சர்.

"அந்நியச் செலாவணிக்கு ரிஸர்வ் பாங்க் அதிகாரிகளின் தயவு தேவை. அவர்களையும் குளிப்பாட்டி வையுங்கள்" என்று யோசனை கூறப்பட்டது.

இம்முறை ஹாலிடே இன் ஹோட்டலில் விருந்தும் மற்ற பற்றவையும் அமர்க்களப்பட்டது. வற்றல் குழம்பு கேட்போர், குஜராத்தி உணவு விரும்புவோர், டண்டூரி சிக்கனுக்கு ஆசைப்படுவோர் என்று வகை வகையான ஆசாமிகளுக்கு விதம் விதமான ஆவல்கள் பூர்த்தி செய்யப்பட்டன. அவர்களும் பல்வகை உபசாரங்களையும் அனுபவித்துப் பரிசுப் பொருள்களையும் பெற்றுக்கொண்டு திரும்பினார்கள்.

"அப்பாடா, இனிமேல் ஐஸ் வைக்க இலாக்கா ஏதும் பாக்கி கிடையாது; எனவே நம் கோரிக்கை நிறைவேறிவிடும்!" என்று நிம்மதி அடைந்தார் அமைச்சர். அவர் எதிர்பார்த்தபடியே தில்லியிலிருந்து சில தினங்களில் தொழில் தொடங்க அனுமதி கிடைத்தே விட்டது! ஆவலுடன் உறையைப் பிரித்துப் படித்துப் பார்த்தார் அமைச்சர்:

* டேப் ரிகார்ட்டர் உற்பத்தியில் நாம் ஜப்பானியரை விஞ்ச முடியாது. எனவே அதற்குப் பதில் கோழிப் பண்ணை ஒன்று ஜப்பானியக் கூட்டுறவுடன் தொடங்க அனுமதி வழங்கப்படுகிறது.

* கம்ப்யூட்டர்கள் உற்பத்திக்கு ஏற்கெனவே நிறைய லைசென்ஸ்கள் கொடுத்தாகி விட்டது. எனவே மேற்கு ஜெர்மானியக் கூட்டுறவுடன் பீர் தயாரிப்புத் தொழிலகம் ஆரம்பிக்கவும்.

* விமான பாகங்கள் உற்பத்தித் தொழிலகத்துக்குப் பதில் இத்தாலிய கூட்டுறவுடன் அப்பளாம், வடாம் தொழிலகம் ஒன்று தொடங்கவும்.

* அச்சு யந்திர உற்பத்தி அவசியமில்லை. அதற்குப் பதில் மசாலாத் தூள் உற்பத்தியைப் பிரெஞ்சுக் கூட்டுறவுடன் ஆரம்பிக்கலாம்.

"அடப்பாவிகளா! நன்றாகக் குடித்து விட்டு, டண்டூரி சிக்கனும், வற்றல் குழம்பும், அப்பளாம், வடாமும் புலாவ், குர்மாவும் வெட்டியதன் விளைவா?" என்று கேட்கக் கூடச் சக்தியின்றி பின்னுக்குச் சாய்ந்தார் அமைச்சர்.

# ஆகாச

13

தாரக்ராம் காத்துக் கொண்டிருந்தார். அரவிந்தன் என்ன நிபந்தனைகளை விதிக்கப் போகிறான்? நிச்சயமாக அவைகளில் ஒன்று கூட பண சம்பந்தமாக இருக்காது—அப்படி இருந்தால் அவர் வெகு எளிதாக ஏற்றுக் கொண்டுவிடுவார். பின் என்ன நிபந்தனைகள்.

அரவிந்தன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாருமில்லை. ராஜம்மா கண்ணுக்குத் தெரியவில்லை. ஒருவேளை அவள் மாயாவின் அருகே இருப்பாள். அல்லது சமையலறைக் காரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருப்பாள். தாரக்ராமைப் பார்த்தா ன். பிறகு—

''சார், எங்க கல்யாணம் ஏதேனும் ஒரு சிறிய கோவிலில் மிகவும் எளிய முறையில் நடக்கணும்னு நான் ஆசைப்படுகிறேன். ஆனா இது நிபந்தனை அல்ல... மாயாவின் கழுத்தில் தாலி ஏறின மறுகணமே அவள் உங்களைவிட்டு என்னோடு வந்துவிடுவாள். அதன் பிறகு நீங்கள், நான் சொல்லும் வரையில் அவளைப் பார்க்கவோ, கடிதம் மூலம் தொடர்பு கொள்ளவோ அல்லது மூன்றாம் மனிதர் மூலம் விசாரிப்பதோ கூடாது!'' இது முதல் நிபந்தனை. இதை நீங்கள் ஏற்றுக் கொண்டால் இரண்டாவது கண்டிஷனுக்கு வருகிறேன்'' என்றான்.

தாரக்ராம் அரவிந்தனை வைத்த விழி எடுக்காமல் பார்த்தார். அவனும் தன் கண்களைத் தாழ்த்தவில்லை. இப்போது அவர் அவனுடைய கம்பெனி சேர்மன் அல்ல. நினைத்தால் அவனுடைய சீட்டைக் கிழிக்கும் அதிகாரம் பெற்ற பதவியை வகிப்பவர் அல்ல. ஒரு சாதாரண மனிதர். அதிர்ஷ்டவசத்தால் பெரும் செல்வம் அவருடைய காலடியில் கிடக்கிறது. அது நிச்சயமாக அவரைக் காப்பாற்றாது. அவருடைய எண்ணமெல்லாம் இப்போது மாயாவைப் பற்றித்தான் ஓடிக் கொண்டிருக்கிறது. இது அவருடைய பலவீனம். அவளை ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்துவிட்டால் தம்முடைய பொறுப்பு ஒரு வழியாய்த் தீர்ந்துவிடும் என்று எண்ணுகிறார். இது அவருடைய பண வலிமையால் ஏற்பட்டுவிட்ட அலட்சியக் குணம். தம் பெண்ணை நன்றாகக் குணப்படுத்திவிட்டுத் தான் பொறுப்பான ஒரு பிள்ளைக்கு மணம் முடிக்க வேண்டும் என்ற பொறுமை அவரிடம் இல்லை. மாயாவுக்காகத் தாம் செலவழிக்கும் ஒவ்வொரு நிமிடமும் தம் மாபெரும் வியாபாரத்துக்குக் கிடைக்கக் கூடிய லாபத்தைத் தடுத்து நிறுத்துகிறது என்று அவர் நினைக்கிறார். இல்லாமற் போனால் இப்படிப் பலவீனம் கொண்ட இருபத்திரண்டு வயதுப் பெண்ணின் திருமணத்துக்கு அவசரப்படுவானேன்?

தாரக்ராமால் தொடர்ந்து அரவிந்தனுடைய தீட்சணியப் பார்வையைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அரவிந்தனை அவர் தம் நண்பன் ஒருவனுடைய பிள்ளையாகத் தான் இதுவரை பாவித்திருந்தார். ரங்கன் சாது... உரக்கப் பேசக் கூடத் தெரியாது.. எப்போதாவது தாரக்ராம் கோபமாகவோ அல்லது வேகத்துடனே பேசினால் உடனே அடங்கிப் போய் விடுவார். அப்பேர்ப்பட்டவருடைய பிள்ளையும் அப்பனைப் போலத் தான் இருப்பான் என்று போட்ட கணக்கு தப்பு என்று இப்போது புரிந்தது. சென்னையில் டாஜ் ஒட்டலிலும் காரியாலயத்திலும் அவர் பார்த்த அரவிந்தன் வேறு. இப்போது, உதட்டின் கடையோரத்தில் லேசாக அரும்பும் புன்னகையோடு, அவருடைய மார்பை ஊடுருவி, மனத்தைப் பார்க்க முயலும் அரவிந்தன் வேறு. இந்த அரவிந்தனை அவர் எதிர்பார்க்கவில்லை.

திடீரென்று அவர் பேசினார்.

''உன் ஆசைக்கு — அதாவது சின்னக் கோவிலில் எளிய முறையில் கல்யாணத்தை நடத்துவது — நான் மதிப்புக் கொடுக்கிறேன்... நம்ம தேசத்தில் லட்சக்கணக்கான கோவில்கள் இருக்கு... ஆனா... ஆனா...''

அரவிந்தன் மௌனமாக உட்கார்ந்திருந்தான். அவன் எதற்கு அவரிடமிருந்து வார்த்தையை வரவழைக்க முயற்சிக்க வேண்டும்?

''ஆனா என் பெண்ணை நானே பார்க்க வரக் கூடாதுன்னு கண்டிஷன் போடறது கொடுமை... மனிதாபிமானம் இல்லாம பேசற பேச்சு.''

''உங்க விமர்சனத்தை நீங்க எப்படி வேண்டுமானாலும் கொண்டு போகலாம்... ஐ'ம் நாட் பாதர்ட்...''

''மாயா என் பொண்ணு!'' அவர் கத்தினார்.

''கல்யாணமாயிட்டா ம ா ய ா என் ஒய்ஃப்!''

''அப்ப எனக்கு உரிமை இல்லேன்னு ஆயிடுமா?''

''யெஸ்...நான் அந்த உரிமையைப் பறிச்சு விடுவேன்.''

''இது அநியாயம்.''

# கங்கை



பி.வி.ஆர்.

''மேபி... பட் இட் இஸ் தி டௌரி ஹூ ஹாவ் டு பே!''

''கல்யாணப் பரிசா மாயாவுக்கு நான் அஞ்சு லட்சம் கொடுக்கறதாகத் தீர்மானிச்சிருக்கேன்...''

''ஒரு பைசா கூட இந்த வீட்டை விட்டு என் வீட்டுக்கு வரப்படாது...''

''என் பொண்ணுக்குக் கூடவா நான் பரிசளிக்கக் கூடாது...?''

''நீங்க உங்க பெண்ணுக்கு என்ன வேணுமானாலும் கொடுக்கலாம். ஆனா என் மனைவிக்கு நீங்க மூணும் மனுஷன். மூணும் மனுஷனுடைய பணத்தை மனைவி வைச்சுக்க எந்தப் புருஷனும் விரும்ப மாட்டான்...''

''மூணு மாசத்துக்கு ஒரு தடவையாவது மாயாவை நான்...''

இப்போது தாரக்ராமின் குரல் கம்மியது. ஆயிரமாயிரம் பேர்களை விரட்டியடிக்கிறவர் இப்போது விரட்டப்படும் நிலைக்கு வந்துவிட்டார். யார் காரணம்? அரவிந்தனா? இல்லை மாயாவா? அல்ல! பின் என்ன? அவர் தம் பெண் மீது வைத்துள்ள பாசம். மென்மையான பாச உணர்வை அரவிந்தன் ஆயுதமாக உபயோகித்துக் கொண்டு தாக்குகிறான்.

அரவிந்தன் பதில் சொன்னான்.

''மாயா இன்னிக்கு இருக்கிறது போலத்தான் பல வருஷங்களுக்கு இருப்பாள் என்றால், நீங்கள் மூன்று மாதம் என்ன, மூன்று வருஷத்துக்கு ஒரு தடவை கூட அவளைப் பார்க்க வரக்கூடாது.''

''இது நிபந்தனை அல்ல, அந்து! இது பனிஷ்மெண்ட்... ஏன் இந்தத் தண்டனையை விதிக்கிறாய்...?''

''மாயா ஒரு புது உலகில் பிரவேசிக்கிறாள். அங்கே பழைய நினைவுகளுக்கு இடம் இருக்கக் கூடாது.''

''ஒரு சின்ன ரிக்வெஸ்ட்!''

''என்ன அது?''



''ஹெல்ப்புக்கு ராஜம்மா வரட்டும்...''

''ஸாரி.''

பின் வேறு யார் ஹெல்ப்புக்கு இருப்பார்கள்?''

''அது உங்களுக்கு அனாவசியம்.''

''அவளாவது அப்பப்ப வந்து பார்க்கலாமா?''

அரவிந்தன் சிரித்தான்.

''மெட்ராஸுக்கு சீசன் டிக்கட் வாங்கிண்டு பம்பாய்லேந்து அடிக்கடி வருவாளா?''

''மெட்ராஸா? நீ என்ன சொல்றே அந்து?''

''கல்யாணமான பெண் ஹஸ்பெண்ட் வீட்டுக்குப் போறா! ஹஸ்பெண்ட் மெட்ராஸ்லே இருக்கான்.''

''நோ... நோ... கல்யாணமான கையோட உன்னை ஹெட் ஆபீஸுக்குக் கொண்டு வரலாம்னு இருக்கேன்.''

''எல்லாம் உங்க திட்டப்படிதான் நடக்கணும்னு எதிர்பார்த்தா நீங்க பெர்ஸனல் லைஃபையும் ஆபீஸ் லைஃபையும் இணைச்சே நினைக்கறீங்கன்னு படறது, சார்.''

''கல்யாணமான பெத்த அப்பன் வரப்படாது... பொண்ணுட்டமா கவனிச்சுண்ட ஒரு ஜீவன் பார்க்கப்படாது... ஏன்னு கேட்டா, பழைய நினைப்புகள் வரப்படாது.. உன்னால எப்படி என் மாயாவைக் கவனிச்சுக்க முடியும்?''

''முடியும்னுதானே, லட்சத்திலே ஒருவன்னு என்னைத் தேர்ந்தெடுத்திருக்கீங்க...? என்ன வழிமுறைகள்னு நான் தீர்மானம் பண்ணிக்கறேன்... என் நிபந்தனையின் உள்ளடக்கம் மாயா என்னுடன் அவள் முழுதும் குணமடைகிறவரை மெட்ராஸ்லேயே இருப்பாள்.''

''அவளுக்குக் குணமே ஆகவில்லை என்றால்?''

''ஏன் உங்க நம்பிக்கை தளருகிறதா?''

''பணத்தை வாரிக் கொட்டி நான் கவனிச்சுண்டு வரேன்... அன்பை வாரி வாரி அள்ளி அள்ளி வீசி ராஜம்மா பார்த்துக்கறா... அப்படியும் மாயா அப்படியேதான் இருக்கா... நீ என்னதான் இன்னிக்கு ஒரு லட்சிய வெறியுடன் முழங்கினாலும், பரீட்சைகளும் சோதனைகளும் வர்றபோது நீ தனிமையில் கஷ்டப்படுவாய்! துவண்டு போவாய்! ஆஃப்டர் ஆல் யூ ஆர் எ ஹியூமன் பீயிங்... உனக்கும் ஒருநாள் அலுப்பு வரும்...''

''அப்படி அலுப்பு வர்றப்ப உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன்...''

தம்மை அரவிந்தன் சாட்டையால் அடிப்பதை அவர் உணர்ந்து வலி தாள மாட்டாமல் அனலைக் கக்கினார். ஆனால் கோபித்துக் கொண்டு என்ன புண்ணியம்? நிச்சயமாக அரவிந்தன் மாயாவைத் தன் வழியில் குணப்படுத்துவான். பண்ணட்டுமே! விரைவில் அவள் குணமானால் விரைவில் அவரால் அவளைப் பார்க்க முடியும். ராஜம்மா வெறும் சமையற்காரி. அன்பும், பாசமும் இருந்தால் என்ன? ஒரு தாயைப் போலக் கவனித்துக் கொண்டாலும் தான் என்ன? சமையற்காரியின் ஸ்தானம் மாறி விடாது. அவள் எதற்கு மாயாவைக் குசலம் விசாரிக்கச் செல்ல வேண்டும்?

''இரண்டாவது கண்டிஷன்?''

''முதலாவது நீங்க ஏற்றுக் கொண்டதாகச் சொல்லவில்லையே?''

''ஓ.கே... நீ எவ்வளவு பிடிவாதக்காரன்னு இப்பப் புரிந்துவிட்டது.''

''இப்பக் கூட எதுவும் தவறவில்லை... நாம் ஒரு கல்யாணப் பேச்சில்தான் ஈடுபட்டிருக்கிறோம்... 'வெளியே போ'ன்னு நீங்க தாராளமாச் சொல்லலாம்...''

''உன் முதல் கண்டிஷனுக்கு நான் சம்மதிக்கிறேன்... இட் இஸ் எ வோர்ட் ஆஃப் ஹானர்... மாயா உங்கூட மெட்ராஸோ இல்லே நீ எங்கே இருக்கியோ...?''

''மெட்ராஸ்தான்... அதில் மாற்றமில்லை.. கம்பெனி சேர்மன் என்கிற எண்ணத்தில் என்னை மாற்றினால் அது என்னைப் பாதிக்காது. உங்க பெண்ணைப் பாதிக்கும்...''

நத்தை தன் எதிரியிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ள தனது உடலை கூட்டுக்குள் இழுத்துக் கொள்ளும். மின் மினிப் பூச்சி மட்டும் நத்தையின் அடிப்பாகத்தின் வழியே அதன் உடலுக்குள் தன் கூர்மையான ஊசி போன்ற உறுப்பின் மூலம் ஒரு வகைத் திரவத்தை செலுத்தி நத்தையை மயக்கமுறச் செய்கிறது. பிறகு சீரண நீரைச் செலுத்துகிறது. உடனே நத்தையின் உடல் கூழாக மாறி விடுகின்றது. பல மின் மினிப் பூச்சிகள் ஒன்று கூடி அக் கூழைக் குடித்து விடுகின்றன. எஞ்சுவது கூடு மட்டுமே.

— துடுப்பதி வெங்கண்ணா



"ஓ.கே. நீ மெட்ராஸ்லே அவ கூட இருக்கறப்ப, நான் அவளைப் பார்க்க வரமாட்டேன்... யார் மூலமாகவும் விசாரிக்க மாட்டேன்... லெட்டர் எழுத மாட்டேன்... ஐ மீன் மாயாவுக்கு! உனக்கு எழுதலாம் இல்லையா?"

"நோ அப்ஜெக்ஷன்..."

"இரண்டாவது நிபந்தனையையும் சொல்லிவிடு... ரொம்ப சிரமப்பட்டு முதலாவதை ஜீரணிச்சிருக்கேன்..."

அரவிந்தன் உடனேயே பேசவில்லை. எண்ணிப்பார்க்கவே மனம் கூசியது. மனமே கூசும்போது எப்படி நாக்கால் உச்சரிக்க முடியும்? இந்த இரண்டாவது நிபந்தனையை அவன் மனமார நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. ஆனாலும் தாரக்ராமின் மனநிலையை எந்த அளவுக்கு இருக்கிறது என்று தெரிய அவனுக்கு ஒரு வாய்ப்பு வேண்டுமே?

மனமில்லா மனத்தோடு பேசியதால் முதலில் வாய் குளறியது. சமாளித்துப் பேசினான்.

"மாயா என்னோடு ரெண்டு வருஷம் இருப்பா... என்னாலான... என்னாலான முயற்சியெல்லாம் எடுப்பேன்... நான் எடுப்பேன்... அப்படியும்... ரெண்டு வருஷத்துக்கு அப்புறமும் மாயா இப்ப இருக்கிற மாதிரியே இருந்தா — இருக்க மாட்டா — அவளை நான் ஒரு மனநோய் விடுதியில் சேர்த்து விடுவேன்..."

தாரக்ராம், "கொய்ட் ரீஸனபிள். ஆனா அது பிரைவேட் அஸைலமாக இருக்கட்டும்.. சர்க்கார் விடுதி வேண்டாம்" என்றார்.

அவரே சில சமயங்களில் மாயாவை பம்பாயில் ஒரு தனியார் மனநோய் விடுதியில் சேர்த்து விடலாமா என்று யோசித்த காலம் இருந்தது. மனம் வரவில்லை. ராஜம்மாவும் அவருடைய யோசனையை மூர்க்கத்தனமாக எதிர்த்தாள். எத்தனை டாக்டர்கள் வேண்டுமானாலும் வீட்டுக்கு வந்து பார்க்கட்டும். மாயாவை வீட்டை விட்டு வெளியே அனுப்பக் கூடாது. இப்போது அரவிந்தன் தான், இரண்டாண்டுக்குப் பிறகு, செயல்படுத்தக் கூடிய திட்டத்தை வெளியிடுகிறான். தவறு இல்லை.

"ஷ்யூர் சார்... செலவையும் பாராமல் பிரைவேட் அஸைலத்தில் சேர்க்கிறேன்... அங்கே அவ மூணு வருஷம் இருப்பா... அப்படியும் அவ நாம நினைக்கிறபடி, எதிர்பார்க்கிறபடி மனநிலை மாறலேன்னா... மாறலேன்னா..."

"மாறலேன்னா? சொல்லு, அந்து... மாறலேன்னா என்ன செய்வே?"

"உங்ககிட்டே திருப்பி அனுப்பிவிட்டு ரெண்டாம் கல்யாணம் பண்ணிப்பேன்..." அரவிந்தன் வார்த்தைகளை உதிர்க்கும் போதே உள்ளே உதிரம் பொங்கியது. நிச்சயமாக நடக்காத ஒன்றை, நடக்கக்கூடும் என்ற பயத்தை அவன் அவருக்குக் காட்டுகிறான்.

தாரக்ராம் ஒருகணம் அயர்ந்து போனாலும் மறுகணமே சமாளித்துக் கொண்டார். அரவிந்தன் ஒரு லட்சியவாதியின் நிலையிலிருந்து யதார்த்த நிலைக்கு இறங்கிவிட்டான். வெற்றியை நினைத்து லட்சிய சங்கை முழங்குகிறவன், தோல்வியின் நிழலைக் கண்டதும் ஓடுகிறான்.

''இதுதான் உன் லட்சியமா?''

''நோ... என் லட்சியம் உங்க பெண் மாயாவைக் குணப்படுத்துவதுதான்.... ஆனால் எல்லோரும் எல்லா யுத்தங்களிலும் ஜெயிப்பதில்லை. என் நிலையில் நீங்கள் இருந்தால் வேறு என்ன செய்வீர்கள்?''

''என்னால் ஒளிவுமறைவுடன் பேச முடியும் அந்து! ஆனா அது உங்கிட்டே பலிக்காதுன்னு எனக்குத் தெரியும்... நான் உன் நிலையில் இருந்தால், ஒன்று இந்தக் கல்யாணத்துக்கே சம்மதிக்க மாட்டேன். அப்படி ஒரு வீக் மோமெண்ட்லே மனசு மாறிக் கல்யாணம் செய்து கொண்டா, என்னாலே ஒரு வருஷம்கூடத் தாள முடியாமல் போயிடும்... நீ பாலைவனத்திலே கிணறு வெட்டப் போறே... உன் சக்தியையும் மீறி நீ ஆழமாகப் போகப் போக, ஏமாற்றம்தான் ஏற்படறது... ஒரு நாள் உன் இதயமும் சோர்ந்து போறது. அப்ப நீ அந்தப் பாலைவனத்தை விட்டு வெளியேர்றது தப்பு இல்லை... ஆனா, அஞ்சு வருஷத்துக்கு அப்புறம் நான் உசிரோட இருக்கேனோ இல்லியோ நிச்சயமா மாயாவை நீ திருப்பி அனுப்ப மாட்டே ... ஒரு நிபந்தனையைப் போட்டு என்னைப் பயமுறுத்தணும்கறதுக்காக நீ பேசறே?''

அவருக்கு இம்மாதிரிப் பேச வேண்டும் என்கிற எண்ணம் பேசும் வரையில் ஏற்படவே இல்லை. பின் ஏன் பேசினார்? ஏதோ ஒரு உள்ளுணர்வு அரவிந்தன்பால் அசைக்க முடியாத நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டதோ?

அரவிந்தனும்வியப்பிலாழ்ந்தான் .....அவனுடைய கடைசி மூச்சுவரை அவன் மாயாவைக் கைவிட மாட்டான். இருந்தாலும் பயமுறுத்திப் பார்த்தான். முதலில் பயந்த அவர் எப்படியோ அவனுடைய மனத்தைப் புரிந்து கொண்டு பேசிவிட்டார்.

எழுந்தான்.

''சார், நான் ஒருதரம் என் வருங்கால மனைவியைப் பார்த்துவிட்டுப் புறப்படுகிறேன்...''

''ஷியூர்... வா, போகலாம்.''

''வேண்டாம், நானே போய்க் கொள்ளுகிறேன்.''

ஒரு பிரமிப்புடன் தாரக்ராம் அவனைப் பார்க்க, அரவிந்தன் நகர்ந்தான்.

* * * * * *

அவன் சென்றபோது—

மாயா ஒரு புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

எட்டிப் பார்த்தான்.

ஆல்பம்.

(தொடரும்)

# இவனும் என் மாணவன்!

ரா.குருராசன்



"எம். எம். டி. ஒழிக"

"M.M.D. Down, Down".

எம். எம். டியை எப்படியும் அவமானப படுத்தியே தீர வேண்டும் என்ற ஆத்திரம் — வெறி — அவசரம் — பள்ளி காம்பவுண்ட் முழுவதும் தெறித்திருந்தது.

"யார் மாமா, இந்த எம். எம். டி. உங்க ஸ்கூல் ஸ்டூடண்ட் லீடரா? பசங்களுக்குள்ளே தகராறு" மாப்பிள்ளை மெதுவாக சந்தேகப்பட்டார்.

"அப்படித்தான் இருக்கணும். இப்பத்தான் பாலிடிக்ஸ் எல்லா இடத்திலேயும் நுழைஞ்சிருக்கே" சம்பந்தி சமாதானம் பேசினார்.

மகாதேவனின் நெஞ்சுக்குள் அமிலம் சுற்றிக்கொண்ட துடிப்பு. இந்த எம்.எம்.டி. நான்தான். என்னைப் பற்றித்தான் ஒரு குறும்புக்காரப் பையன் இப்படி எழுதியிருக்கிறான்."

"இந்த உண்மை மாப்பிள்ளைக்கும், சம்பந்திக்கும் தெரிந்தால் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள். எப்படிப்பட்ட கேவலம். அவமானம்". குத்துப்பட்ட புழுவாகத் துடித்தார்.

பொங்கலுக்கு வந்த சம்பந்தியையும், மாப்பிள்ளையையும் தான் வேலை பார்க்கும் பள்ளிக் கூடத்தை சுற்றிக் காட்ட நேரம் காலம் தெரியாமல் அழைத்து வந்ததற்காக மிகவும் வருத்தப்பட்டார்.

எதிர் சுவரில் மகாதேவன் தலை பெருத்து உடல் சிறுத்து கரிக் கோடாக முழுப் பெயரோடு நிற்க அவரைச் சுற்றிலும் தமிழிலும், ஆங்கிலத்திலும் லட்சார்ச்சனைகள்!

மாப்பிள்ளை சங்கடப்பட்டார். சம்பந்தியின் தடுமாற்றம் தலை குனிவில் தெரிந்தது.

கேட்டைத் திறந்து கொண்டு அட்டெண்டர் வேலு வந்தான்.

"ஐயா. வணக்கமுங்க. பெரிய ஐயா உள்ளே ரூம்லே இருக்காருங்க. மேலே விசாரணை நடக்குது. உங்களையும் அர்ஜண்டா கூட்டியாரச் சொன்னாரு. நீங்களே வந்துட்டீங்க".

இக்கட்டான இறுக்கமான சூழ்நிலையில் வேலுவின் அழைப்பு ஒரு வடிகாலாக இருந்தது.

"சம்பந்தி, நீங்க போய் உங்க பள்ளிக் கூட வேலையைப் பாருங்களேன். பள்ளிக் கூடத்திலே சுத்திப் பார்க்க என்ன இருக்கு; நாங்க மார்க்கெட் பக்கம் பொடி நடையா போயிட்டு வர்றோம்." சம்பந்தி சமயோசிதம் உள்ளவர்.

மகாதேவன் வேலுவைப் பின் தொடர்ந்தார்.

"எல்லாம் இந்த சுவரிலே எழுதின கேசுதான் சார். நேத்து ராத்திரி யாரோ எழுதிட்டுப் போயிட்டானுங்க. ஐயா காலேலே வந்தவர் உடனே தாசைக் கூட்டிட்டு வரச் சொன்னார். அவன் மேலேதான் சந்தேகம். ஐயா கிளாசிலேதானே படிக்கிறான். புடிச்சிட்டாரு".

"தாஸ்..." மகாதேவனை வாட்டும் புதிரின் விடை.

* * * * *

வீட்டுக்கு அடங்காத பிள்ளை. சட்டையில் எப்பொழுதும் சிகரெட் வாசம்; கணக்கு நோட்டுக்குள் ஜப்பான் குமரி கண்ணடிப்பாள். இரண்டாண்டுகளுக்கு ஒரு பள்ளிக் கூடமாக கூடு விட்டுக் கூடு பாய்ந்து இது கடைசிக் கூடு. +2. கடைசி வருடம். படிக்க மாட்டான். படிக்கத் தெரியாது. ஆறடி உயரம். மூன்று பெஞ்சுகளைத் தாண்டிக் கூடச் சுரண்டும் கூர்மையான பார்வை, பாஸ் பண்ணுவதற்கு பலத்த மேல் மட்ட சிபாரிசு.

போன மாதம். ஆறுமாதத் தேர்வு.

மகாதேவன் கண்காணிப்பில்தாஸ் முதல் ஐந்து நிமிடம் "பப்பிள் கம்" மில் பலூன்



ஊதுனான். ஜன்னல் வழியாக பஸ் ஸ்டாண்டில் நின்ற ''லோ ஹிப்''புக்கு டாடா காட்டினான்.

திடீரென்று நல்ல பிள்ளையாக மாறி பக்கம் பக்கமாக எழுத ஆரம்பித்தான்.

சந்தேகப்பட்ட மகாதேவன் பக்கத்தில் போனார்.

அவன் சட்டை உண்டாகியிருந்தது.

''என்னப்பா, பாக்கெட்லே.

''அதெல்லாம் பர்சனல் லெட்டர்ஸ். அப்பா போஸ்ட் பண்ணக் கொடுத்திருக்கார்.''

''பரீட்சை ஹால்லே எந்த விதமான அனாவசியக் காகிதங்களும் பாக்கெட்ல இருக்கக் கூடாதுன்னு தெரியுமில்லே. என்கிட்டே குடு. நான் பரீட்சை முடிந்து வெளியே போறப்போ தர்றேன்.''

''சாரி.''

''எடுடா.'' மிரட்டலில் கொஞ்சம் பயந்தான். வெளிக் காட்டிக் கொள்ளவில்லை.

சடாரென்று சட்டையில் கைவிட்டார். அத்தனையும் கிழித்த நோட்டுகள்.

''இதுதான் உங்கப்பா கொடுத்தபர்சனல் லெட்டரா''? தாஸ் அலட்சியமாக சூவிங்கம்மை மென்றபடி ஒரு ''பில்லா'' பார்வை பார்த்தான்.

''என் அனுமதியில்லாம என் பாக்கெட் உள்ளே கை விடறது பெரிய தப்பு.''

புயலாக மாறி இழுத்துக் கொண்டு போய் வெளியே தள்ளி ஆபீசில் ஒப்படைத்தார்.

* * * * *

தலைமையாசிரியரின் கோபம் நாக்கின் குழறலில் — தொண்டைக் குழியின் துடிப்பில் தெரிந்தது.

''பொய் சொல்லாதே. உன் கையெழுத்து எனக்கு நல்லாத் தெரியும். மிஸ்டர் மகாதேவனைப் பற்றி எழுத உன் கிட்டே மோடிவ் கூட இருக்கு.

"சும்மா சும்மா அதையே சொன்னால் எப்படி? நீங்க சொல்றதுதான் பொய். நான் எழுதல்லே. அவர் யாருன்னே எனக்குத் தெரியாது. அவர் கீழ் கிளாஸ் வாத்தியார். நான் மேல் கிளாஸ். எனக்கும் அவருக்கும் எந்த சம்பந்தமுமில்லே. நான் ஏன் அவரைப் பற்றி எழுதணும்."

மகாதேவன் நெஞ்சுக்கு நேரே கத்தியால் குத்தியது போன்ற வேதனை.

தலைமையாசிரியர் தலையைத் திருப்பி சன்னலுக்கு வெளியே நின்ற மாமரத்தை எரித்தார். தெருவில் ஓடும் பஸ்ஸைப் பார்வையால் சுட்டுக் கரியாக்கினார்.

கடைசி ஆயுதத்தைப் பிரயோகித்தார்.

"உங்கப்பா வீட்டிலே இருக்காரா? உங்க போன் நம்பர் என்ன?"

"அப்பா வீட்டிலேயில்லே. எம். பி. சார் கூட பி. எம். மைப் பார்க்க டெல்லி போயிருக்கிறார். அடுத்த வாரம் வரலாம். அப்புறம் ஒரு பாரின் டூர் போறார்."

இந்த அடியில் தலைமையாசிரியரின் ஆயுதம் மழுங்கி உடைந்தது.

"சரி. நீ போ..." மகாதேவன் பக்கம் திரும்பினார். "மிஸ்டர் மகாதேவன், மன்னிக்கணும். இவனை நம்மாலே ஒண்ணும் செய்ய முடியாது. இன்னிக்கு மத்தியானத்துக்குள்ளே காம்பவுண்டுக்குப் புதுக் காவியடிக்க ஏற்பாடு பண்ணிடறேன்." அசட்டுச் சிரிப்பு சிரித்தார்.

* * * * *

மெரீனாவில் மாப்பிள்ளையும், பெண்ணும் அலையில் அலைய, மகாதேவனுக்குக் காலையில் பட்ட வலி ஆறவேயில்லை. அவரது இருபத்து ஐந்து வயது உழைப்பை தாஸின் பேச்சும் செயலும் நிர்வாணமாக்கியிருந்தன.

தூரத்தில் சின்ன சலசலப்பு. இரண்டு பேர் ஒரு கலர் சட்டைக்காரனைத் துரத்த — கொத்துக்கொத்தாகப் பூத்திருந்த கும்பல் கதம்ப மாலையாகக் கூடியது.

கும்பலின் நடுவே இரண்டு இளம் தாவணிகள். பயத்தில் முகப் பவுடர் கரைய புறாக் குஞ்சுகளாக ஒண்டிக் கொண்டு நடுங்க — கலர் சட்டைக்காரன் "மஃப்டி"யின் பிடியில் சிக்கித் திணறிக் கொண்டிருந்தான்.

"சார்... சார்... என்னை வுட்டுடுங்க சார். இனிமே இப்படி பண்ண மாட்டேன்."

மஃப்டி விட்ட ஆத்திரம் நிறைந்த குத்தில் ஒரு

"ஹ... ம்... மா..."

"ஏன்யா கூட்டம் போட்டுட்டு நிக்கறீங்க. போங்க... போங்க" ஒரு சப் இன்ஸ்பெக்டரின் கைத்தடி கூட்டத்தை விரட்டப் பார்த்தது.

மகாதேவன் எழுந்தார்.

சப இன்ஸ்பெக்டரின் பார்வை திமரென்று நிலை குத்தியது. "சார் எம். எம். டி சார். சௌக்யமா சார்." நெருங்கினார்.

மகாதேவன் திகைத்தார்.

"நான்தான் சார் பாலு. உங்க ஸ்டூடண்ட். நீங்க இன்னும் அந்த ஸ்கூல்லேதானே இருக்கீங்க?" சப் இன்ஸ்பெக்டரின் இறுகிய பிடியில் அவர் கைகள் நடுங்கின.

இவர் எந்த பாலு. பாலகுமார் — பாலசந்திரன் — பாலமுரளி — பாலகிருஷ்ணன் — பாலநாதன் — எத்தனையோ பாலன்கள். எத்தனையோ வருடங்கள்...

கூட்டம் கலர்ச்சட்டைக்காரனை விட்டு விட்டு இவரை வேடிக்கை பார்த்தது.

மஃப்டி கான்ஸ்டேபின் கலர்ச் சட்டைக்காரனை இழுத்துக் கொண்டு வந்தார்.

"சார். சார். என்னை விட்டு விடுங்க சார். இனிமே பெண்கள் பக்கமே திரும்ப மாட்டேன். நான் ஸ்டூடண்ட் சார்."

"ஸ்டூடண்ட்" — மகாதேவன் சிலிர்த்தார். அந்தக் கலர்ச் சட்டைக்காரன் — தாஸ்... நெஞ்சுக்குள் ஒரு நெருடல். இவன் எங்கே வந்தான்.

"சார். சார்... வாத்தியார் சார். என்னைக் காப்பாத்துங்க சார்."

"என்னடா டூப் அடிக்கறே. எங்க வாத்தியாரைப் போய் உங்க வாத்தியார்ங்கறே.." இன்ஸ்பெக்டரின் உறுதியான கைகள் அவன் புஜங்களை இறுக்கின.

"ஆமா சார், சத்தியம் சார். நான் எம். எம். டி. சார் ஸ்கூல் ஸ்டூடண்ட் சார். நீங்களே கேளுங்க சார்..."

"போடா கழுதை. இவர் ஸ்டூடண்ட்ஸ் இப்படி நடந்துக்கவே மாட்டாங்க."

"சார். சார். இன்ஸ்பெக்டர்கிட்டே சொல்லுங்கோ சார். நான் உங்க ஸ்டூடண்ட்னு சொல்லுங்க சார். இனிமே எந்தத் தப்பும் பண்ணமாட்டேன் சார். அப்பாவுக்குத் தெரிஞ்சா என்னைக் கொன்னுடுவார். என்னைக் காப்பாத்துங்க சார்." கண்ணீர் வாய்க்கால் வழிய நின்றவனை மகாதேவன் பார்த்தார்.

மகாதேவன் உணர்ச்சிகள் சிதறி வெடித்தன.

"இன்ஸ்பெக்டர்... இவன்... இவனும்... என் மாணவன்தான். மன்னித்து..." தலை குனிந்து விம்மும் மகாதேவனைக் கடற்கரை தேற்ற முடியாமல் திணறிக் கொண்டிருந்தது.

"பொதுவாக நமது நாட்டு டெலிவிஷனில் டெல்லி ஆதிக்கம் அதிகமாக இடம் பெற்றிருப்பதால் இனிமேல் அதை "டெல்லிவிஷன்" என்று அழைக்கலாமே?"

—ஜெயின் சேகர்.



மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி...
என்னாளும் உங்கள்
பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு,
ஹபுஷா (தேவதாரம்) ஆகிய
நாலு வகை இயற்கைத்
தைலங்களின் நற்கலவை
யான ரெக்ஸோனா...சருமப்
பராமரிப்பிற்கு இயல்பான
வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

## 26

## ஆர்க்காடு திணறுகிறது



ஸ்ரீவேணுகோபாலன்

சிந்துவிடம் பிரியா விடைபெற்றுத் திரும்பித் தனது இருப்பிடமான வேதபுரீசுவரச் சத்திரத்திற்கு வந்தபோது மனம் கனத்திருந்தது. நிறைய எண்ணங்கள் நுண்ணிய புஷ்பங்களாக பூத்திருந்தன. உப்பங்கழிப் பக்கம் போன போதுஎவ்வளவு கனமான இதயமுடன் சென்றான்....இப்போதுஎன்ன லகுவான இதயத்துடன் மிதக்கின்றான்.

சத்திரத்தில் ஏற்கெனவே ஆள் ஒருவன் காத்திருந்தான். மதாம் தூப்ளே அழைப்பதாகக் கூறினான்.

திரும்பவும் அரசாங்க மாளிகை நோக்கிச் சென்ற போது நிறைய எண்ணங்கள் வட்டமிட்டன.

இந்த பிரெஞ்சு நகரில் அவனுக்கு எல்லாம் ராஜ உபசாரமாக நடக்கிறதே!

இது அத்தனையும் வென்ஸானைச் சாரும் என்று நினைத்தான்.

மாளிகையின் புறவாசல் வழியாக அழைத்துச் சென்று மதாம் முன்னால் நிறுத்தினான் அந்த ஆள்.

''என்னப்பா! எப்படி இருக்கிறாய்?'' என்று கேட்டாள் மதாம்! மெத்தை போட்ட நாற்காலியில் உட்கார்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். மைக்கூடும் காகிதங்களும் மேஜை மீது இருந்தன. பேனாவைக் கூட்டுக்குள் போட்டு அவனை நிமிர்ந்து பார்த்தாள். ''இனிமேல் என்ன செய்யப் போகிறாய்?'' என்றாள்.

''அப்பாவைக் காணவில்லை. இனிமேல் ஊருக்குப் போய்விட நினைக்கிறேன்'' என்றான் வர்மன்.

''ஊருக்கா! நன்றாகச்சொன்னாய்! இங்கே இருந்துகொண்டு அப்பாவைத்தேடுவாயா? ஊருக்குப் போய் என்ன செய்யப் போகிறாய்? நான் ரங்கப் பிள்ளை கிட்டே கூடச் சொல்லியிருக்கிறேன்.''

ரங்கப்பிள்ளைதான் அரசாங்க துபாஷி.

''கிடைத்துவிடுவாரா?''

''நிச்சயம் கிடைப்பார். மனம் தளராதே! அதுவரை எனக்கு ஒரு காரியம் செய்!''

''சொல்லுங்கள் மதாம்.''

''செஞ்சுகாவைப் பார்த்துவிட்டாயல்லவா?''

''ஆமாம்!''

''உனக்குத் திருப்திதானே?''

மதாமின் வெளுத்த முகத்தில் ஒரு குறும்பு நகை ஓடியது. அவரது பருமனான நெஞ்சுகள் பெருமூச்சில் மேலே நிமிர்ந்து இறங்கின.

''திருப்திதான்!'' என்றான் வர்மன். குரல் அப்போது குழைந்தது.

''அவளைப் பத்திரமாக கார்வேட் நகரம் சேர்க்க வேண்டாமா?''

''மதாம் அதுதான் என் ஆசை!''

''அது எனக்குப் புரியும். வந்து... உன் பேர் என்ன?''

''வர்மா!''

''வர்மா! இப்போது இருக்கும் 'பொலிடிக்'கில் (அரசியலில்) அவளை அவ்வளவு தூரம் அழைத்து[illegible] போவது சரியல்ல! அந்த இங்கிலீஷ் பாத[illegible]ர்களால் நமக்கு ஆபத்து நிறைய உண்டு. திரும்பி அவளைப் பிடித்து எங்கேயாவது கொண்டு போய் விடுவார்கள். பிறகு நமக்கு அகப்பட மாட்டாள்.''

''நீங்கள் சொல்வது சரி மதாம்.''

''நீயே பார்த்தாயே! அவளை ர[illegible]போகத்தில்தான் நாங்கள் வைத்திருக்கி[illegible]றோம்!''

''நல்லது மதாம்.''

# மோகினி திருக்கோலம்



"அவளுக்கு இங்கு ஒரு குறைவும் வராது. இந்த கிளைவ் ஆர்க்காட்டுக்குள் உட்கார்ந்து கொண்டிருக்கிறான். ராஜாசாகிப் அவனைச் சுற்றி ஒரு முற்றுகைப் போட்டிருக்கிறார். முற்றுகை தொடர்ந்து இருபது நாளாகிறது. உள்ளே அவன் இனிமேல் ஒருநாளும் இருக்க முடியாது. சீக்கிரம் விழுந்துவிடுவான். அவன் விழுந்து, ஆர்க்காட்டு சுபாவில் சிறிது அமைதி வந்தால்தான் இவளை கார்வேட் நகரம் கொண்டு போக முடியும். அது வரை பொறுக்க வேண்டும்."

வர்மன் ஆழ்ந்து பார்த்தான்; "அதெல்லாம் சீக்கிரம் நடக்குமா?" என்றான்.

"எல்லாம் சீக்கிரம் நடக்கும் பார்" என்றாள் அவள். "அதற்குள் எனக்கு ஒரு காரியம் செய்!"

"என்ன?"

"கார்வேட் ராஜாவிடம் நீ செஞ்சுகாவைப் பற்றிச் சொல்ல வேண்டாமா? அவர் கவலைப்பட்டுக் கொண்டிருப்பாரே!"

"ஆமாம்."

"நானே ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். அவரிடம் கொண்டு சேர்ப்பித்து விடு."

தயங்கினான் வர்மன்.

"என்ன யோசிக்கிறாய்?" என்றாள் மதாம்.

"இல்லை மதாம்! நீங்கள் அனுமதி தந்தால் நான் செஞ்சுகாவை யார் கண்ணிலும் படாமல் கொண்டு போய் விட முடியும்!" என்றான் வர்மன்.

"ஐயையோ! அது எப்படி முடியும்? கார்வேட் நகரிலிருந்து ஆர்க்காடு வரையில் உன்னால் அவளைப் பாதுகாக்க முடியவில்லையே!" என்றாள்.

அதுவும் உண்மைதான் என்று அவனுக்குத் தோன்றியது.

"அது மட்டுமில்லை வர்மா! மராத்தியர் எங்கும் உலாவிக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் பிடித்துவிட்டால்...

"மராத்தியர்கள் உங்கள் நண்பர்கள் இல்லையோ?"

"நண்பர் வகையில் சேர்த்தி அல்ல! சந்தர்ப்ப வாதிகள். பணம் அதிகமுள்ளவர் பக்கம் சாய்வார்கள். அதுமட்டுமல்ல! பல மராத்திக் கும்பல்கள் தன்னிச்சையாக

உலாவுகின்றன. அவர்கள் யார் பணம் கொடுத்தாலும் வேலை செய்வார்கள்.''

வர்மன் பேசவில்லை.

''தவிர இங்கிலீஷ்காரர்கள் இப்போது ரொம்ப வியாபகமாக இருக்கிறார்கள். அவர்கள் கைகளில் அகப்பட்டாலும் ஆபத்து! நான் சொல்வதைக் கேள், வர்மா! செஞ்சகா நிச்சயம் கார்வேட் நகரம் போகத் தான் போகிறான். நல்ல நேரம் வரை பொறு. இப்போது எனக்கு ஒரு காரியம்!...''

''சொல்லுங்கள்!''

''கார்வேட் ராஜாவுக்குக் கடிதம் எழுதுகிறேன். அதை அவரிடம் கொண்டுபோய்க் கொடு.''

''செய்கிறேன்.''

''இது ரொம்ப ரகசியமாக இருக்க வேண்டும்.

''சரி.''

''குவர்னர் தூப்ளேக்கும் துபாஷி ஆனந்த ரங்கருக்கும் தெரியக் கூடாது!''

''சரி மதாம்.''

''கார்வேட் ராஜா ஒருவரிடமே காட்ட வேண்டும். வேறு யாரிடமும் காட்டக் கூடாது.''

''இல்லை.''

''தந்தை பேரில் சத்தியம் செய்வீரா?''

''சத்தியம்! போதுமா?''

மேஜை மீது எழுதி வைத்திருந்த கடிதத்தில் மதாம் கையெழுத்து இட்டாள்.

பிறகு அதை மடக்கி ஒரு உறையுள் போட்டு அவனிடம் கொடுத்தாள்.

பின்னர் எழுந்து அருகில் இருந்த தட்டை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

அதில் வெற்றிலை, பாக்கு பழம், அத்தர், கற்கண்டு ஒரு ஜரிகை வேட்டி, துப்பட்டா, தூரம் பார்க்கும் கண்ணாடிக் குழல் (டெலஸ்கோப்) ஒரு பண முடிப்பு, எல்லாம் கொடுத்தாள்.

''போய் சீக்கிரம் திரும்பி வா, வர்மா. உனக்கு இன்னும் பரிசில்கள் தருவேன்!'' என்றாள் மதாம்.

குழலை வர்மன் வினோதமாய்ப் பார்த்தான்.

''இது தெலஸ்கோப்!'' என்றாள் மதாம். அது பார்க்கும் வகையை விளக்கினாள்.

வர்மன் ஒற்றைக் கண்ணில் வைத்துச் சன்னல் வழியாகப் பார்த்தான்.

நெடுந்தொலைவில் கடலும் ஒரு கட்டுமரமும் தெரிய பளீர் என்று முகம் பெரிதாகியது.

ஆச்சரியத்தில் வாய் திறந்து விட்டது.

ஒவ்வொரு திசையையும் பார்த்துவிட்டுக் குழலை மடக்கி உள்ளே வைத்தான்.

காணாத அதிசயத்தைக் கண்ட உவகை அவன் முகத்தில் தெரிந்தது.

''வர்மா! இன்னும் எனக்கு உதவி செய்! உனக்கு இன்னும் அதிசயங்கள் எல்லாம் தருகிறேன்!'' என்றாள்.

''நாராயணா!'' என்று அழைத்தாள்.

அவளது துபாஷி வந்தான். — ''இந்தா இவருக்கு ஒரு உயர்ந்த ரகக் குதிரையைக் கொடு. ஒரு கைத்துப்பாக்கி கொடு! பயணத்திற்கு வேண்டியதெல்லாம் கொடு! ஒரு பிரெஞ்சு அடையாளச் சீட்டு கொடு!''

எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு பொழுது சாய்ந்த பிறகு சத்திரம் திரும்பினான் வர்மன்.

* * * * *

ஆர்க்காட்டு நகரத்தில் இருந்தது அந்தக் கோட்டை! ஒரு மைல் சுற்றளவு தான். ஆனால் சற்று பலம் வாய்ந்த கோட்டை!

இந்தக் கோட்டைக்குள்தான். ராபர்ட் கிளைவும் அவனது ஐநூறு பேர் படைக் கூட்டமும் சிக்கி இருந்தார்கள்.

கோட்டைக்கு வெளியேதான் ஆர்க்காட்டு நகரமும் அதன் லட்சம் ஜனத்தொகையும்.

கோட்டையைக் கிளைவ் பறித்துவிட்டார் என்பதைக் கேட்டு, சந்தாசாகிப் தமது மகனை ராஜாசாகிப்பை அனுப்ப, அவர் தமது பத்தாயிரம் பேர் படையோடு ஆர்க்காட்டு நகரத்துக்குள்ளே சென்று கோட்டையின் வாசல்புறம் நின்றார்.

கிளைவின் ஐநூறு பேர் படை எங்கே? நவாபின் பத்தாயிரப் படை எங்கே?

நவாபின் பத்தாயிரம் பேர்ப் படையில் பாதிப் பேர் நல்ல பயிற்சி அளிக்கப்பட்டவர்கள். மேனாட்டுப் படைகளுக்கு நிகரானவர். பிரெஞ்சுக்காரர்கள் இந்தப் பயிற்சியை அவர்களுக்கு அளித்திருந்தார்கள்.

எனவே, கிளைவின் அதிகாரிகள் அந்தப் பெரும் சேனையைப் பார்த்து மலைத்து நிற்க,

கிளைவ் சிறிது அளவு கூட மனத்தளர்ச்சி அடையவில்லை.

அந்த இளைஞனிடம் எப்போதுமே ஒரு நம்பிக்கை இருந்தது. தான் எப்போதுமே ஜெயிக்கப் பிறந்தவன் என்று நினைத்தான். பிரெஞ்சுக்காரர்கள் செயின்ட் ஜார்ஜ் கோட்டையைப் (சென்னை) பிடித்தபோது கூட அசகாயமாகத் தப்பித்தவன் அவன். மேலும் இரண்டு மூன்று சண்டைகளில் மற்றவர்கள் செய்ய முடியாது என்று நினைக்கும் காரியத்தை இளைஞன் கிளைவ் நிகழ்த்தி வெற்றியைப் பிடித்திருக்கிறான்.

எப்படியும் தன்னால் இந்த ராஜாசாகிப்பை ஜெயிக்க முடியும் என்று மனத்துள் இரும்பு போல் உறுதி கொண்டான் அவன்.

கிளைவ் ஆர்க்காட்டை அடைந்தது செப்டம்பர் 1, 1751. ராஜாசாகிப் ஆர்க்காட்டை அடைந்த தேதி செப்டம்பர் 23, 1751. மறு நாள் (செப்டம்பர் 24) தனது சொற்பப் படையோடு வெளியே வந்து போர் இடத் தீர்மானித்தான்.

திடீரென்று கோட்டைக் கதவுகளைத் திறந்து கொண்டு வந்து ராஜாசாகிப் படைகளைத் தாக்க ஆரம்பித்தான்.

எதிரிகள் பிரமித்து விட்டார்கள். என்ன நடக்கிறது என்று தெரிவதற்குள் நூற்றுக்

கணக்கானவர்கள் மாய்ந்து விட்டார்கள்.

எனினும் உயர் முறையில் பயிற்சி பெற்ற ராஜாசாகிப் படைகள் ஒரு மேனாட்டுப் படை போலவே இயங்கி கிளைவைத் தாக்க ஆரம்பித்தன.

கிளைவின் சொற்பப்படை சீக்கிரம் திணற ஆரம்பித்தது. மளமள என்று சிப்பாய்கள் விழ ஆரம்பித்தார்கள். கேப்டன்களும் வரிசையாகக் கொல்லப்பட்டார்கள்.

இளைஞன் கிளைவ் தானே வெளியில் வந்து யுத்தத்தை நடத்திக் கொண்டிருந்தான்.

படைகளின் தவிப்பு அவனுக்குப் புரிந்து விட்டது. சளக்கமளித்தவாறு அவனே படைகளோடு போரிட்டான்.

மேலும் சிறிதுநேரம்தான் அவர்களால் தாக்குப் பிடிக்க முடிந்தது.

நகரத் தெருக்கள் பக்கம்தான் சண்டை நடந்தது. எதிரிச் சிப்பாய் ஒருவன் ஒரு வீட்டின் மீது ஏறிக் கிளைவைக் குறிபார்த்துக் கொண்டிருந்தான். கிளைவ் விடாமல் தனது சிப்பாய்களோடு சேர்ந்து போர் இட்டுக் கொண்டிருக்க, எதிரிச் சிப்பாய் குறி வைப்பதைக் கவனிக்கவில்லை.

ஆபத்து எந்த நொடியிலும் காத்திருந்தது.

ஆனால் திடீரென்று எதிரிச் சிப்பாயின் செய்கையைப் பார்த்த இங்கிலீஷ் காப்டன் ஒருவன் கிளைவ் அருகில் தாவிக் குதித்து அவனை அப்பால் தள்ளினான்.

அதேநேரம் எதிரிச் சிப்பாயின் துப்பாக்கியும் வெடிக்க, குண்டு அந்தக் காப்டன் உடம்பில் ஏறியது.

அடுத்தகணம் அவன் துடித்துப் போய் விழுந்து இறந்தான்.

கிளைவ் உடனே பின் வாங்க உத்தரவிட்டான்.

சிப்பாய்கள் வேகமாகக் கோட்டைக்குள் போனார்கள்.

கோட்டைக் கதவைச் சாத்தி சிக்கென அடைத்தார்கள்.

உள்ளே கணக்கெடுத்த போது ஐம்பது சிப்பாய்களும் 15 வெள்ளைக்கார அதிகாரிகளும் இறந்திருப்பது தெரிந்தது.

கிளைவ் கலங்கினான்.

பதினைந்து அதிகாரிகளையும் ஒரே சண்டையில் இழந்தது மனத்தைப் பாதித்தது.

இன்னும் சில அதிகாரிகள் மிச்சமிருந்தார்கள்.

தனது சொற்பப் படையில் இனி ஆட் சேதம் ஏற்பட்டால் தனது பலம் வெகுவாகக் குறையும் என்று அவன் எண்ணினான்.

இனி வெளிச்சண்டை போடக் கூடாது. கோட்டையைப் பாதுகாப்பதுதான் தனது ஒரே வேலை என்று நினைத்தான்.

உள்ளே அடைபட்டுக் கிடந்து பத்து நாட்கள் ஓடிவிட்டன. எதிரியால் கோட்டையை உடைத்து உள்ளே வர முடியவில்லை.

ஆனால் கோட்டைக்குள் உணவு அதிகம் கிடையாது என்பது எதிரிக்கு நன்றாய்த் தெரியும்.

எனவே சண்டையில் முறியடிப்பதை விடப் பட்டினியால் முறியடிப்பது எளிது என்று எண்ணினான்.

பன்னிரண்டாம் நாளில் இருந்து உள்ளே நிலைமை மிகவும் மோசமாகியது.

உணவை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்தாலும் இருக்கிற அளவு வெகுவாகக் குறைந்துவிட்டது. இன்னும் ஒரு வாரம் ஓடினால் அதிசயம்!

அன்று மாலையில் கிளைவ் தனது ஆலோசனை அறையில் கட்டில் மேல் திண்டுபோட்டு சாய்ந்திருக்க, அவனது கால் பகுதியில் இன்னும் கடைசி ரணங்கள் இருந்ததால் அதைச் சுற்றி ஒருவன் 'பாண்டேஜ்' கட்டிக் கொண்டிருந்தான்.

பக்கத்தில் 45 வயது மதிக்கத்தக்க இந்தியர் ஒருவர், தலைப்பாகை தாடி மீசையுடன் கிளைவ் முன்னால் பவ்யமாக உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"கம்பெனி கவுன்ஸிலுக்கு நான் எழுதி விட்டேன். இந்தா பாட்ரிக்! அந்தக் காகிதத்தை இப்படிக் கொடு!" என்று கூறினான் கிளைவ்.

பாட்ரிக் ஓடிவந்தான்.

"இன்னும் மூன்று நாட்களுக்குள் எங்களுக்குப் பணம் வர வேண்டும். இல்லையேல் நாங்கள் ஆர்க்காட்டை இழக்கிறோம்!" என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை கிளைவ் அந்த ஒற்றன் கையில் கொடுத்தான்.

"உடனே போங்கள்! பணம் வரவேண்டும். இல்லையேல் எல்லோரும் மடிவோம்!" என்றான்.

(தொடரும்)

தொல்லை கொடுத்த எல்லை

ஸ்ரீ ரங்கம் திருவானைக்கோயில் எல்லைத் தகராறு உச்ச கட்டத்தில் நின்ற நேரம் அது. அப்போது ஸ்ரீரங்கம் வந்து இருந்த ஸ்ரீ ஸ்ரீ வியாசராஜ சுவாமிகளிடம் இப்பிரச்னைக்கு தீர்வுகாண மக்கள் அணுகினார்கள். சுவாமிகள் ஒரு வழியைத் தெரிவித்தார். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து ஒருவர் வேகமாய் மூச்சுவிடாமல் (ஓடி) எந்த இடத்தில் மேலும் மூச்சைப் பிடிக்க முடியாமல் விட்டு விடுகிறாரோ, அந்த இடமே அக் கோயிலின் எல்லை என்பதே அவர் கூறிய வழி. இதிலும் ஒரு சிக்கல். எந்த தரப்பைச் சேர்ந்தவர் ஓடுவது என்ற புதுப்பிரச்னை முளைத்தது. முடிவில் இரு சாரர்களின் ஒப்புதலுடன் சுவாமிகளே ஸ்ரீரங்கம் கோயிலிருந்து ஓடி வந்தார். பிறகு மூச்சை விட்டு நின்றார். அந்த இடமே இன்றைய ஸ்ரீரங்கத்தின் எல்லையாக உள்ளது. அங்கு ஒரு ஆஞ்சநேயர் கோயிலும் அமைந்து விட்டது.

தகவல் ஆர். சுப்பாராவ்







**காதல் 'மயக்கம்'**

பஸ்ஸில் கோவை போய்க் கொண்டிருந்தேன். சக பிரயாணியான இளம் பெண் ஒருத்தி மயங்கி விழவும், அவளுக்கு உதவப் போக, கோவை சேர்வதற்குள் இருவருக்கும் காதல் உண்டாகிவிட்டது. இப்போது எங்களுக்குக் கல்யாணமாகி ஒரு வயதில் குழந்தையும் இருக்கிறான்.

—ஏ.ஏ. இளங்கோவன், திருச்சி—2.

**கதிர்காமம் போகையிலே**

கதிர்காமத்துக்கு காரில் சென்று கொண்டிருந்தேன். களுத்துறையருகில் ஒருவன் கத்தியுடன் குறுக்கே பாய்ந்து வண்டியை நிறுத்தினான். டிரைவர் நாங்கள் கொழும்பிலிருந்து வருவதாகச் சொன்னதும் 'நீங்கள் தமிழரா?' என்றான். நாங்கள் 'ஆம்' என்றதும் "நல்லது, நானும் தமிழன்தான். நீங்கள் போகலாம்" என்று எங்களுக்கு விடை கொடுத்தான்.

—இரா கல்யாணசுந்தரம், மதுரை—9.

**சங்கீத ஸ்பெஷல்**

கணவரும் நானும் சிதம்பரம் செல்ல ரயிலேறினோம். எங்கள் பெட்டியிலேயே பிரயாணம் செய்தார்கள் திருச்சூர் ராமச்சந்திரனும், திருவநந்தபுரம் ஜி. எஸ். மணியும். கூடவே ஓர் இளம் மிருதங்க வித்வான். இரண்டு பாடகர்களும் மாற்றி மாற்றிப் பாட... நானும் நான் இயற்றிய சங்கரர் ஸ்துதியைப்பாட....அந்த இசைப்பயணத்தை மறக்கவே முடியாது.

—கமலா தியாகராஜன், சென்னை—28.

**காரில் நிச்சயித்த கல்யாணம்**

திருச்சியிலிருந்து காரில் சென்னை திரும்பும்போது சென்னைக்கு 50 கி.மீ. தூரத்தில் இஞ்சின் கோளாறு காரணமாக கார் நின்று போயிற்று. அவ்வழியே சென்னை போய்க் கொண்டிருந்த மற்றொரு காரை நிறுத்தினோம். அப்பா, பெற்றோரும், நானும் அந்தக் காரில் ஏறிக் கொண்டு அவர்களுடனேயே புறப்பட்டுவிட்டோம். வழியில் பேச்சு வாக்கில் கார் ஓட்டி வந்த இளைஞர் கல்யாணத்திற்கு இருக்கிறார் என்று தெரிந்ததும் என் அப்பா அவர் அப்பாவுடன் பேசி காரிலேயே எனக்கும் அவருக்கும் கல்யாணம் நிச்சயித்து விட்டார்.

— உஷா சேஷாத்ரி, சென்னை—78.

**மூர்த்தி பெரிதானாலும்**

பழனி போய்க் கொண்டிருந்த பஸ் ஹோட்டல் ஒன்றில் டிபனுக்கு நின்றது. என் சக பிரயாணியான பக்கோடா காதர் என் அருகே சாப்பிட உட்கார்ந்தார். அவர் நிறைய சாப்பிடுவார் என்று நினைத்தேன். ஆனால் 'இரண்டு இட்லி, சாம்பார்' என்று அவர் 'ஆர்டர்' செய்ததும் சர்வர் உட்பட எல்லோரும் சிரித்துவிட்டனர்.

— எஸ். அனந்தராமன், சென்னை—1.

**நடத்துனரின் நகைச்சுவை**

வயதான பாட்டியை பஸ் ஏற்ற வந்தவர் கண்டக்டரிடம் 'பாட்டியைத் தெப்பக்குளத்தில் இறக்கி விடுங்கள்' என்றார். கண்டக்டர் விஷமத்தனமாக, 'பாட்டிக்கு நன்றாக நீந்தத் தெரியுமோ?' என்று கேட்கவும் பஸ்ஸே சிரிப்பில் குலுங்கியது.

— எஸ். பூமா, திருச்சி—6.

**விண்ணளந்தாலும் வேங்கடவனை வணங்கு**

சென்னையிலிருந்து பம்பாய்க்கு விமானத்தில் போன போது மேலேயிருந்து ஏழுமலையான் ஆலயத்தின் தங்கக் கோபுரத்தை தரிசனம் செய்ததும், விமான ஓட்டுனர் விமானத்தின் வலது பக்க இறக்கையை சற்றே தாழ்த்தி வேங்கடவனுக்கு வந்தனம் செலுத்தி, பிரதட்சணமாகச் சென்றதும், மெய் சிலிர்க்க வைத்த அனுபவம்.

— வ. நா. சுப்பிரமணியன், பம்பாய்—86.

**யானைமீதமர்ந்து கானகத்துள் சென்றபோது...**

அஸ்ஸாமில் காஸிரங்கா சரணாலயம். ஏழு யானைகள் எங்கள் குழுவை ஏற்றிக் கொண்டு காட்டுக்குள் பிரவேசித்தன. கடைசி யானையில் துப்பாக்கியுடன் காவலர்

கள். காட்டின் அடர்ந்த பகுதியில் திடீ ரென்று என் யானைக்கருகே மூன்று காண்டா மிருகங்கள் நின்று ஏறிட்டுப் பார்த்தன. பத்து நிமிடங்களுக்கு எங்களை கதிகலங்கச் செய்துவிட்டு மெல்ல ஒவ் வொன்ருய் நகர்ந்து போய்விட்டன.

— ஆர். நிர்மலா, திண்டுக்கல்.

**தன்மானம் இருப்பதில் தவறில்லையே**

பட்டுக் கோட்டை பஸ்ஸில் 15 வயது சிறுவன் லாட்டரிச் சீட்டு வாங்குமாறு பிர யாணிகளை வற்புறுத்திக் கொண்டிருந்தான். தொல்லை தாங்காமல் பெரியவர் ஒருவர், 'இந்தாப்பா, ஒரு டிக்கெட் விற்ருல் உனக்கு எவ்வளவு கிடைக்கும்?' என்று கேட்டார். பத்து காசுகள் கிடைக்கும் என்று பையன் சொன்னதும் அவர் அவனிடம் 25 பைசா கொடுத்து இடத்தைக் காலிப் பண்ணச் சொன்னுர். அந்தப் பையனே, "நீங்க என் அப்பா மாதிரி. இந்தாங்க காபிக்கு" என்று ஒரு ரூபாயை அவரிடம் நீட்டி அவரைத் திகைக்க வைத்துவிட்டான்.

— க. சிதம்பரம், புதுக்கோட்டை

**மூக்குடைப்பு**

இலக்கியக் கூட்டத்திற்காக காரில் ஒரு சிற்றூருக்குப் போய்க் கொண்டிருந்தோம். ஊர் எல்லையிலேயே சுமார் 200 பேர்கள் எங்களுக்காக காத்திருக்கக் கண்டு பெரு மிதம் தாளவில்லை. அவர்கள் அருகே சென் றதும் "'நம்நாடு' படப் பெட்டி இன்னும் வரவில்லையா?" என்று அவர்கள் கேட்டார் கள். அப்போதுதான் அவர்கள் ஏன் அங்கு கூடியிருந்தனர் என்பது புரிந்தது. அசடு வழிந்தோம்.

— கு. சேதுராமன், திருமங்கலம்.

**கூடையில் போட்டால் என்ன?**

பஸ்ஸில் ஏறிய பெண்மணி தன் கூடையை இஞ்சின் அருகே வைத்தார். அப் போது டிரைவர், "கியர் போடக்கூட இட மில்லை, கூடையை எடும்மா" எனவும், அப் பெண் "கியர் போட இடமில்லாட்டி இந்தக் காலிக் கூடையில்தான் போட்டுக்கயேன்" என்றதும் சிரிப்பொலியில் பஸ் அதிர்ந்தது

— பி. அஜாய்குமார், பெரியசேவலை.

**கிராமப்புற சாலையின் மகிமை**

"கிராமத்தில் அத்தைப் பெண் கல்யாணம் முடிந்து திரும்பிக் கொண்டிருந்தோம். மீந்து போன தயிரையெல்லாம் வீணடிக்க மன மின்றி ஓர் உயரமான பாத்திரத்தில் கொட்டி நாங்கள் வந்த மாட்டு வண்டியில் ஏற்றிக் கொண்டாள் அத்தை. ஊர் வந்து தயிரைத் திறந்துப் பார்த்தால் அழகாக வெண்ணெய் திரண்டு, மிதந்துகொண்டிருந் தது. வேலையே இன்றி மோரும் கிடைத்தது. வண்டி அத்தனை குலுங்கி இருக்கிறது!

— பி. வி. ஜானகி, சென்னை– 21.

**திருக்குறளுக்கு நன்றி**

சில மாதங்களுக்குமுன் அண்ணு போக்கு வரத்துக் கழக பேருந்தில் பயணம் செய் தோம். டிக்கட்டுக்குக் கொடுத்தது போக மீதி சில்லறையாகப் பெற வேண்டிய 80 ரூபாயை வாங்க மறந்து விட்டோம். பேருந் தின் எண் தெரியவில்லை. அதில் எழுதியிருந்த திருக்குறளை நினைவுகூர்ந்துதான் பேருந்தைக் கண்டுபிடித்து சில்லறையைப் பெற்ருேம்.

— மீனுக்ஷி பாலசுப்ரமணியன், புதுக்கோட்டை.

**காட்டு வெள்ளம்**

கோவையிலுள்ள பொன்னூத்து மலைக் குப் போக ஓர் ஓடையைக் கால்நடையாகக் கடக்க வேண்டும். தரிசனம் முடிந்து திரும் புகையில் உச்சி வெய்யில். ஓடை வறண்டு கிடந்தது. அதைப் பாதி கடக்கையில் 'ஹோ' வென்ற பேரிரைச்சல் கிளம்பியது. "வெள் ளம் வருகிறது. ஓடுங்கள்" என்று எங்கள் ··ட்டி எச்சரித்தார். அம்மனை வேண்டிக் கொண்டே ஓடிக் கரையை அடைந்ததுதான் தாமதம் நாங்கள் நடந்து வந்த பாதையில் நுங்கும் நுரையுமாக வெள்ளம் அடித்துக் கொண்டு வந்தது.

— உமார்த்தி, கோவை.







**கூவிய பழக் கூடை**

கொடைக்கானல் பேருந்தில் கோழிக்குச் சுமைக் கட்டணம் உண்டு. ஓலைப்பையில் கோழியை அடைத்து அதைப் பழம் என்று சொல்லி டிக்கெட் வாங்காமல் ஏமாற்ற நினைத்தார் ஒருவர். கோழி கூவியதும், 'அண்ணே பழம் கூவற அதிசயத்தைப் பார்த்தியா?!' என்று நடத்துனர் நக்கல் செய்ய டிக்கெட் வாங்காதவர் முகத்தில் வண்டி அசடு வழிந்தது.

— ஆர். ஜி. சுப்ரமணியன், சென்னை—59.

**தெய்வீக உணர்வு**

பழனி மலை அடிவாரத்திலிருந்து மலை உச்சிக்குப் போக 'விஞ்சி'ல் ஏறி அமர்ந்தேன். உடன் வந்த சித்தி முருகனின் ராஜ அலங்காரம் எப்படி இருக்கும் என்று வர்ணித்தவாறே வந்தார். பக்தர்கள் வெற்றி வேல் முழக்கம் செய்ய மலை உச்சியை மெல்ல எட்டினேம். மேலே ஏற ஏற சுவர்க்கத்தைப் போய்த் தொடுகிற உணர்வு. மெய் சிலிர்த்து மனம் லேசாகி முருகனைக் காணும் முன்னரே புளகாங்கிதம் அடைந்துவிட்டேன்.

— பி. பாப்பாத்தி. தூத்துக்குடி—3.

**போனஸ் வேண்டும் ப்ளீஸ்!**

தீபாவளி சமயம். பஸ்ஸில் ஏறிய நான்கு ரவுடிகள் டிக்கெட் வாங்கும் வழியாக இல்லை. கண்டக்டர் நயமாக "அண்ணே, ஏற்கனவே பல்லவன் நஷ்டத்தில் ஓடுதாம். எங்களுக்கு போனஸ் வேற தரணும்; அதனாலே டிக்கெட் வாங்கிடுங்க" என்றதும் பஸ்ஸில் சிரிப்பு அலை மோதியது.

— பி. டி. சண்முகராஜ். பல்லாவரம்—43.

**எத்தியோப்பியா அனுபவம்**

எத்தியோப்பியாவின் வடகிழக்குப் பகுதியில் கடல் மட்டத்திற்கு 100 மீட்டர் கீழே உள்ள **Danakil Depression** க்கு உப்பு படிவங்களையும், எரிமலைகளையும் காணச் சென்றோம். மாலையில் திரும்பும் போது, ஒரு காட்டாற்றின் பாறைகளுக்கிடையே எங்கள் ஜீப் சிக்கிக் கொண்டு விட்டது. இரவு முழுவதும் கும்மிருட்டில் ரத்தத்தை உறைய வைக்கும் மிருகங்களின் ஊளைச் சத்தத்திலும், ரத்தத்தை உறிஞ்சும் கொசுக்களுக்கிடையேயும் கழித்தோம். மறு நாள் பாறைகளை உடைத்துத்தான் வண்டியை நகர்த்த முடிந்தது.



— டி. விஸ்வநாதன், ஆ. தெக்கூர்.

**ஓடிப் போன பெட்டி**

அதிகாலையில் ரயில் பிடிக்க சக்கரம் வைத்த பெட்டியுடன் பஸ் ஏறினேன். பஸ் ஒரு வளைவில் வேகமாகத் திரும்பவும் பெட்டி வழுக்கிக் கொண்டு படி வழியே இறங்கி சாலையில் வெகு தூரம் ஓடிவிட்டது. பஸ்ஸை நிறுத்தி விட்டு இறங்கி ஓடிச் சென்று பெட்டியை மீட்டு வந்தேன்.

—திருமதி கிருஷ்ணமூர்த்தி, குமாரப்பட்டணம்.

---

**ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**பி. அஜாய்குமார்,**
**F—116, CCSM. பெரிய சேவலை,**
**உளுந்தூர்பேட்டை வட்டம்,**
**தென்னார்காடு மாவட்டம் 607 209.**

---

"உங்க ஆபீஸ் வேலை நிறுத்தம் சம்பள உயர்வு கேட்டு நடக்குதோ?"
"ஊஹூம்... சம்பளம் கேட்டு."

—கிழை. அ. கதிர்வேல்.



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® – திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

## 6

குரலைச் செருமிக் கொண்டு ராஜம் பேசவாரம்பித்தாள்.

சிவாவும் மாலாவும் உன்னிப்பாய்க் கேட்கலாயினர்.

''...பதினெட்டு வருஷங்களுக்கு முன்னுலே, நெனைவிருக்கா உங்களுக்கு? என்னேயும் காய்ச்சலிலே அனலாப் பொறிஞ்சிண்டிருந்த மாலாவையும் கழுத்தைப் புடிச்சு வெளிலே, தள்ளினேளே, நெனைவிருக்கா...? 'யாரு இருக்கா, எனக்கு?' ன்னு இப்பக் கேக்கறேளே, 'அவளுக்கு யாரு இருக்கா'ன்னு அப்போ நெனைச்சுப் பார்க்கலியே?' கையிலே குழந்தையும், வயத்திலே கருவுமா. அவள் என்ன செய்வாள்னு, எங்கே போவான்னு நினைச்சுப் பார்க்கலியே? அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவாள்னு கேட்டுப் பார்க்கலியே? அப்புறம் எத்தனைத் தடவை உங்களைப் பார்க்கப் பிச்சைக்காரி மாதிரி விட்டுவாசலிலே நின்னேன்? திரும்பிக் கூடப் பார்க்காமெ போனீர்களே? அப்பல்லாம் கேட்கத் தோணாத கேள்வியை இப்பக் கேக்கத் தோணறது இல்லே...? ஏன்னா, அப்ப பாதிக்கப்பட்டது நான். அதுனாலே தோணல்லே... இப்ப உங்களைப் பாதிக்கறது. அதனாலே கேக்க முடியறது. இல்லியா...?''

அழுத்தம் திருத்தமாய்க் கேட்டாள் ராஜம்.

''நான் பண்ணினதெல்லாம் தப்புன்னு உணர்ந்துட்டேன் ராஜீ... அதானே ஒன்னைத் தேடி வந்தேன்...''

இல்லையென்று தலையசைத்தாள் ராஜம்.

''தப்புன்னு உணர்ந்து வரல்லே... வேறே வழியில்லாமெ வந்திருக்கிறீர்கள்... கையிலிருந்த பணமெல்லாம் போய், வியாதியெல்லாம் வந்ததுக்கப்புறம் அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு என்ன பண்றதுன்னு ஆனதுக்கப்புறம் 'ராஜம்' நினைவுக்கு வந்திருக்கிறாள்... சாப்பிட வந்திருக்கிறீர்கள்... இப்ப உங்களுக்குத் தேவை தங்க இடம்... சாப்பிட ஆகாரம்... அதுக்காகத்தான் வந்திருக்கிறீர்கள்... எனக்குத் தெரியும்...

''...நீங்க வந்த அன்னிக்கே எனக்குத் தெரியும். மாலாவுக்கும், சிவாவுக்கும் என் மேலே எவ்வளவு கோபம்னு தெரியும். இந்த அம்மா இப்பிடிச் சொரணை கெட்டுப் போய் இருக்காளே அப்பிடீன்னு கோபம்னு எனக்குத் தெரியும்...''

சிவாவும், மாலாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். நாக்கு உலர்ந்து போயிருந்தது.

''...உங்களை இந்த மூணு நாளா இந்த விட்டிலே இருக்க அனுமதிச்சதுக்குக் காரணம் இருக்கு. 'இது உங்க வீடு. நான் ஒங்க பெண்டாட்டி. இவர்கள் உங்க குழந்தைகள்' அப்படீங்கற உரிமையிலே உங்களை நான் இருக்க வைக்கல்லே...

''...இந்தப் பதினெட்டு வருஷங்களா நான் பட்ட மான அவமானங்களும் இந்த மூணு நாளோட முடியணும்னுதான் இருக்கச்சொன்னேன். 'புருஷன் இருக்கானே போயிட்டானே...' 'பூவும் பொட்டும் யாருக்காக வச்சுக்கறு?' அப்படீன்னு இந்த ஊர்லே என்னைக் குத்திக் குத்திப் பேசறப்போ நான் சுவாமிகிட்டப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டேன். '' அப்பனே, அந்த மனுஷரை உயிரோட என் கண்ணுலே காட்டு. இந்த ஊர்க்காரர்களுக்கு இன்னமும் நான் சுமங்கலிதான்னு நிரூபிக்கவாவது அவரை ஒரு தடவை கண்ணிலே காமிச்சுடு'ன்னு. உன்

ஜெயரதன்



# புதிதாய்ப் பிறந்தாள்

மனசு மட்டும் அடிச்சுச் சொன்னது அவர் இருக்கார்'னு. இந்த ஊர்க்காரர்களுக்குத் தெரியணும்னுதான் உங்களை உள்ளே வர விட்டேன். என் எதிர்பார்ப்பு நிறைவேறியாச்சு... ஊர்க்காரர்களுக்குத் தெரிஞ்சாச்சு...'

''என் வருமானத்துக்குத் தினம் அரை முழம் பூ அதிகம்தான். இருந்தாலும் தவறாமே தினசரி பூ வச்சிண்டேன். ஏன் தெரியுமா? சுமங்கலின்னு இந்தச் சமுதாயத்திலே ஒரு அந்தஸ்து இருக்கு. அது ஒரு பெரிய பாதுகாப்புன்னு அதை அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். புருஷன் என்கிற ஆசாமியை விட, அவன் கொடுத்த சின்னங்களுக்கு நம்ம சமுதாயத்திலே நல்ல மதிப்பு இருக்கு... ஆன்களைவிட ஐடியாலஜி முக்கியம்னு சிவா ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படிக்கச் சொல்வான். அதை நம்ம சமுதாயத்திலே இன்னமும் கடைப்பிடிக்கறோம்..''

ஒரு நிமிடம் பேச்சை நிறுத்தினாள். எதையோ நினைவில் துழாவுகிற மாதிரி அந்தரத்தில் வெறித்துப் பார்த்தாள்.

பலராமன் இடிந்து போய் உட்கார்ந்திருந்தான்.

''...ஒரு பொண்ணு தனியா இருக்கறது எவ்வளவு கஷ்டம்னு பொண்ணா இருந்து பார்த்தால்தான் தெரியும். எவ்வளவு சொன்னாலும் புரியாது. பாதுகாவல் இல்லேன்னு கிழவன் கூடக் கிட்ட வரப் பாக்கறான். ஏதோ வினைப் போற மாதிரி மற்றவர்களுக்குத் தோணறது. 'எனக்குப் பாதுகாவல் இருக்கு'ன்னு ஊர் பூராத் தண்டோராப் போடற மாதிரி பூவைத் தலேலே வச்சிண்டேன். தாலிக் கயிறைத் தழையத் தழையத் தொங்க விட்டுண்டேன். முன்பின் தெரியாதவர்களுக்கு ஒரு அச்சம் இருக்குமில்லையா? 'யாரோ ஒருத்தன் இருக்காண்டா'ன்னு கொஞ்சம் தள்ளி நிற்பானில்லையா? பூவை வாசனைக்காக வச்சுக்கல்லே. அது பந்தோ



பஸ்த்துன்னு வச்சிண்டேன். தாலியும் பொட்டும் ஒரு பத்திர உணர்வைத் தந்தது. அந்தக் காலங்களிலேதான் நம்ம வாழ்க்கை முறையிலே இருக்கற சூட்சுமம் புரிஞ்சுது... எவ்வளவு கட்டுகோப்பான ஒரு சிஸ்டத்தைப் பெரியவர்கள் உண்டாக்கியிருக்கிறார்கள்னு தெரிஞ்சுது... பல ஆயிரம் வருஷங்கள் அயலார் ஆதிக்கத்துலே இருந்தாலும் கூட, வேறே கலாச்சாரத்தைக் கொண்டவர்கள் ஆட்சி பண்ணியும்கூட இந்த வாழ்க்கை முறையைப் பாதிக்க முடியல்லேன்னு அதுலே உள்ளூர எவ்வளவு பலம் இருக்கணும்னு புரிஞ்சிண்டேன்... தனிப்பட்ட முறையிலே உங்களை என்னாலே மதிக்க முடியல்லே. 'சிவா யாருக்குப் பொறந்தான்'னு நீங்களே ஒங்க வாயாலே கேட்டு அனுப்பிச்சப்புறம் உங்களை எப்படி மதிக்க முடியும்? சொல்லுங்கோ... இந்த மாதிரி ஒரு கேள்வியை ஒரு கணவன் கேட்கலாமா? பெண்டாட்டின்னு அவ்வளவு எளக்காரமா? என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டற ஆம்பிளைக்கும், தாலி கட்டின புருஷனுக்கும் அப்புறம் என்ன வித்தியாசம் இருக்கு...?''

தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்தான் பலராமன். முகம் ஜிவுஜிவு என்று சிவந்து போயிற்று.

''நீ சொல்றபெரியவர்கள் 'பதிபக்தி'ன்னு சொல்றது மட்டும் மறந்து போயிடுத்தாக்கும்...?''

''...பதிபக்திங்கறது பெரிய பக்குவம். அது தனியான நிலையில்லே... சதியை மிதிக்கிற பதியை எப்படி மதிக்க முடியும்? எதுக்கு மதிக்கணும்...? எந்த நீதி சாஸ்திரமும் ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமாய்த்தான் இருக்கணும்... ஒருதலைப்பட்சமா இருக்கறதுக்குப் பேரு நீதியில்லே...''

பொருள் பொதிந்த பார்வையை மாலாவிடம் செலுத்தினான் சிவா.




''...தப்புன்னு தெரிஞ்சுடுத்து. என்னை மன்னிச்சுடு'ன்னு நீங்க சொல்லலாம்... மன்னிக்கறதுக்கு நான் யாரு? புராணங்களிலே தெய்வம் கூட யாரையும் மன்னிச்சதா நான் கேட்டதில்லே. 'நீ பண்ணின பாவத்துக்கு இது தண்டனை. அனுபவிச்சுட்டு' என் பாதாரவிந்தத்திற்கு வா. கைலாசத்துக்கு வா, வைகுண்டத்துக்கு வா'ன்னு சொல்றதாத்தான் கேட்டிருக்கேனே தவிர; 'தப்புப் பண்ணிட்டியா? பேஷ். பரவாயில்லே. போனாப் போறது போ'ன்னு தெய்வமே சொன்னதா நான் கதை கேட்டதில்லே. தெய்வமே மன்னிக்காத போது. கேவலம் மனுஷி நான் என்ன மன்னிக்கறது...?''

நான் சொல்லும் சொற்களின் பொருள் உணர்ந்து நிதானமாய்ப் பேசினாள் ராஜம்.

''...இப்பக் கூட உங்க கவலை அடுத்த வேளைச்சாப்பாட்டுக்குஎன்ன பண்றதுன்னு தான் இருக்கும். எனக்குத் தெரியும். நீங்க என்னைத் தொரத்தின மாதிரி, நான் உங்களை அனுப்பப் போறதில்லே... மூணு நாளா அதுக்காகத்தான் அலைஞ்சேன்... நேத்திக்கு ராத்திரிதான் ஏற்பாடு ஆச்சு...''

சிவாவும், மாலாவும் ஆச்சர்யத்துடன் அம்மாவையே பார்த்தார்கள்.

''...மதராஸிலே 'விவேகானந்தா விஸ்ராந்தி ஆஸ்ரமம்'னு ஒண்ணு இருக்காம். வக்கீல் சொன்னார். வயசானவர்களைப் பராமரிச்சுக் காப்பாத்தறளாம். அதுலே உங்களைச் சேர்க்க ஏற்பாடு பண்ணியிருக்கேன்.. இன்னிக்கு மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு ரயில். உங்களுக்கு 'டிக்கட்' வாங்கியாச்சு... வக்கீல் பிள்ளை ராமப்பிரஸாத் உங்களை அழைச்சிண்டு போய் ஆஸ்ரமத்திலே சேர்த்துடுவான். அதுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாச்சு... மாசா மாசம் பணம் நான் அனுப்பிச்சிடுவேன். உங்களுக்குக் கவலையே வேண்டாம்... இதையெல்லாம் நீங்க என் புருஷன் அப்படிங்கறதுக்காகச் செய்யல்லே... என் கொழந்தைகளுக்கு அப்பாவான நீங்க சாப்பாட்டுக்குக் கஷ்டப்படக் கூடாது. அந்தப் பாவம் என் கொழந்தைகளுக்கு வரக் கூடாது... அவ்வளவுதான் நான் சொல்ல வேண்டியது. நீங்க போகலாம்...''

நின்று நிதானமாய்ப் பேசிய ராஜம், புடவைத் தலைப்பால் கவனமாய் பொட்டு அழிந்து விடாமல் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

மூர்க்கத்தனமாய் எழுந்தான் பலராமன். ஆவேசத்தில் கைகால்கள் படபடவென நடுங்கின.

''நான் வேண்டாம்னு, நான் கட்டின தாலி மட்டும் எதுக்கும்...? கழட்டிக் குடும்மா... நாயே...''

ஆழமாய்ப் பார்த்தாள் ராஜம். பின்னர் முடியாது என்பதற்கு அடையாளமாய்த் தீர்க்கமாய்த் தலையை அசைத்தாள்.

## அருள்வாக்கு

ஆசாரங்களில் பெரும்பாலானவற்றை விட்டு விட வேண்டும் என்றுதான் ஸமீப காலமாக, ஒரு நூற்றாண்டாக, நம் நாட்டில் சீர்திருத்தக்காரர்கள் சொல்லி வருகிறார்கள். ஒவ்வொரு சீர்திருத்தக்காரரும் வரும்போது நம்முடைய மதம் என்னும் வயலில் இதுதான் களை, இதை எடுத்து விட்டால் போதும், பயிர் நன்றாக இருக்கும் என்று சொல்கிறார்கள். இப்படி அவரவருக்குத் தோன்றுகிறபடி ஒவ்வொன்றாக எடுத்துப் போட்டுக் கொண்டே இருந்தால் பயிர் என்றே ஒன்றும் மிஞ்சாது! ஆனதால் தர்ம சாஸ்திரங்களில் நம்மைவிட அறிவிலும் அருளிலும் அநுக்ரஹ சக்தியிலும் எவ்வளவோ மேல்நிலையில் உள்ள ரிஷிகள் என்னென்ன சொல்லியிருக்கிறார்களோ, அவற்றைப் பூரணமாக அநுஸரிப்பதற்குத்தான் நாம் பிரயத்னப்பட வேண்டும். அதற்கான மன உறுதியைத் தரும்படி பகவானிடம் பிரார்த்திக்க வேண்டும்.

இன்னொன்று யோசித்துப் பார்க்க வேண்டும். இத்தனைச் சீர்திருத்தத் தலைவர்கள் வந்து இவ்வளவு சீர்திருத்த இயக்கங்களை ஆரம்பித்தும் இவற்றிலிருந்து நாம் மஹானாக, ஞானியாக எத்தனைப் பேரைப் பெற முடிந்திருக்கிறது? யாரை வேண்டுமானாலும் ரிஷி, அவதாரம், Messenger of God என்று சொல்லிவிடலாம். ஆனால் வாஸ்தவத்தில் ஜனங்களின் தாபத்தை சமனம் செய்கிற அநுக்ரஹ சக்தி இவர்களுக்கு இருக்கிறதா என்பதே கேள்வி. ஸம்பிரதாயமாக வருகிற குரு உபதேசத்தால் இப்போதும் பல பேர் பெற்று வருகிற அநுக்ரஹமும் ஸ்வாநுபூதியும் இந்த reform — காரர்களிடமிருந்து வருமா? நேற்றைக்கொன்று, இன்றைக்கொன்று என்று சொல்லிக் கொண்டிருக்கும் இவர்களுக்காக tradition என்ற வயிரம் பாய்ந்த ஸம்பிரதாய விருக்ஷத்தை வெட்டி விடுவதா? இப்படி நான் கேட்கவில்லை. பத்துப் பன்னிரண்டு வெள்ளைக்காரர்களே — அவர்கள் ஆத்ம சம்பந்தமாக நிறையப் படித்து ரொம்பவும் ஸாதனைகளும் செய்தவர்கள் — என்னிடம் வந்து இப்படி வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்!

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.**



"...உங்களைப் பத்தின என் கணிப்பு சரியாப் போயிடுத்து. பார்த்தேளா...? தாலியைக் கழட்டி வீசியெறிய வாழ்க்கை என்ன சினிமாவா, வீசியெறிஞ்சுட்டு ரொம்ப சுலுவா சுபம்னு போடறதுக்கு? அப்புறம் இந்த சமுதாயத்திலே வாழ வேண்டாமா? என் பெண், பிள்ளைகளுக்கு வாழ்க்கையை அமைச்சுக் கொடுக்க வேண்டாமா?... உணர்ச்சி வசப்பட்டு நான் பண்ற காரியம் என் பெண், பிள்ளைகள் வாழ்க்கையைப் பாதிக்காமெ நான் பார்த்துக்க வேண்டாமா...? உங்க கவலே உங்களைப் பத்தியே தான் இருக்கு. அதனாலே தான் 'கொண்டா'ன்னு கேக்க முடியறது... நான் திரும்பவும் சொல்றேன். உங்களைத்தான் நான் மதிக்கலியே தவிர, இந்த வாழ்க்கை முறையை ரொம்ப மதிக்கறேன். அதுலே ரொம்பப் பாதுகாவல் இருக்கு... பல ஆயிரம் வருஷங்கள் சோதனை பண்ணித் தட்டிக் கொட்டி ஏற்படுத்தின சிஸ்டம் இது... இதை நான் மூடத்தனமா மீற விரும்பல்லே... இந்தத் தாலியும் பொட்டும் பூவும் எனக்கொரு கவசம். தற்காப்பு. அதை இழக்க முடியாது... அதோட இன்னொண்ணு. என் பிள்ளைக்கும் மனைவி வருவாள். அவள்கிட்ட நாம சரியா நடந்துக்கணும்னு அவனுக்குத் தெரியணும். அது மாதிரி என் பெண்ணுக்குப் புருஷன் வருவான். அவனை மதிக்கணும் ஆனா மிதி படக்கூடாதுன்னு அவளுக்குத் தன்நம்பிக்கை வரணும். அவர்களுக்கு நான் ஒரு பாடமா இருக்கணும்... அதுக்காகத்தான் இந்தத் தாலி. அதுக்காகத்தான் உங்களுக்கு விஸ்ராந்தி ஆஸ்ரமம். இதுக்காகவே நான் புதுசாப் பொறந்துட்டது மாதிரி இருக்கு எனக்கு... சரி... நீங்க புறப்படற வழியைப் பார்க்கலாம்... எனக்கு நாழியாறது..."

சுற்றுப்புறமே செயலிழந்து, பயங்கலந்த அமைதியுடன் உறைந்து போயிருந்தது. தொலைவில் ஒற்றைப் பறவையொன்று 'வீய்ங் வீய்ங்' என்று கத்தியது சன்னமாய்க் காதில் விழுந்தது.

"யாரையோ மெட்ராஸுக்கு அழைச்சிண்டு போகணுமாமே? அப்பா அனுப்பிச்சார்" என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தான் ராமப்பிரஸாத்.

எதையும் லட்சியம் செய்யாதவளாய், அநாயாசமான நிதானத்துடன் சமையலறையினுள் சென்று, ஒரு கூஜா நிறையத் தண்ணீரை எடுத்து ஒரே மூச்சில் குடித்துமுடித்தாள்.

பின்னர் ஸ்வாமி படத்தருகே கைகூப்பி நின்றாள்.

"...விழி செவி இரண்டும் வேலவர் காக்க
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத்திரு பல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க.."
மெய்யுருகிச் சொல்ல ஆரம்பித்தாள்.

(முற்றும்)

# ஏப்ரல் 1 ல் வழக்கு விசாரணை

ரொம்ப நேரம் அலைந்து வீடு திரும்பும் போது நாகமுத்து தன் வீட்டு வாசலில் நிற்பதைப் பார்த்து மகிழ்ந்து, "உங்களை எங்கிட்டெல்லாமோ தேடறேன், நீங்க இங்கு வந்திருப்பது தெரியாமல் என்றான்.

"நாளைக்கு உன் வழக்கு வாய்தா இல்லையா. வேலாயுதம் விடியகாலம்பறவரேன். ரெடியா இரு".

"சரியண்ணே. உங்களுக்குத்தான் எவ்வளவு அக்கரை. ஒரே ஒரு காரியம் நீங்க செய்து தான் ஆகணும்".

"என்னப்பா".

"இந்த இரண்டு வருசமா, கோர்ட்டுக்கும் வக்கீல் வீட்டுக்கும் அலைஞ்சு, அலைஞ்சு விவசாயத்தைக் கவனிக்கவே முடியவில்லே. மனைவி நகை நட்டு எல்லாம் வித்தும் இன்னும் வழக்கு விசாரணைக்கு எடுக்கப்படவே இல்லே.

"கத்தி வலைக்காதே. நாளைக்கு உன் வழக்கை எடுத்து நடத்தணும். அவ்வளவு தானே — ஆளை விடு. நான் அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து முடிக்கிறேன்.

"நாளைக்கும் எந்த காரணத்தினலாவது ஒத்திப் போச்சுன்னு நான் பிரதிவாதி காலிலே விழுந்து சரண்டர் ஆயி வழக்கை தீத்துக்கப் போறேன்".

"அவசரப்படாதே. என் மேலே நம்பிக்கை இருக்கில்லே".

"அதென்ன அப்படிக் கேட்டுட்டீங்க. கடவுளைகூட நம்பாதவன் நான். உங்களை நம்புறேன்".

"சரி. காலையிலே வீட்டாண்டே வந்து விடுகிறேன். நீ புறப்படத் தயாராய் இரு. செலவுக்குப் பணம் வச்சுக்க".

"அதுக்குத்தாங்க வீட்டிலிருந்த பெரிய பாத்திரங்களை வித்துட்டு கையிலே நூறு ரூபாய் வச்சிருக்கேன் — போதாதுங்களா".

"வெள்ளம். அது போதும். ஆறு வழக்கை எடுத்துட்டா தினமும் விசாரணை நடக்கும். சாட்சிக்குப் பணம் கொடுக்கணும். வக்கீல் குமாஸ்தா, கோர்ட் சிப்பந்தி செலவு இப்படி இருந்துகிட்டே இருக்கும்.

"எப்படியாவது பணம் போறட்டிடறேன்".

"சரி. நான் வரேன்".

• • • • •

மறுநாள் காலை ஐந்து மணிக்கே நாகமுத்து வேலாயுதம் வீட்டுக்குப் போய் விட்டான்.

வேலாயுதம் தயாராய் இருந்தான்.

"வேலாயுதம் நம்ம மவனுக்கு இன்னிக்கு ஏதோ ஸ்கூல்லே ஸ்பெஷல் பீசு கட்டணுமாம். உங்கிட்டே பத்து ரூபாய் இருக்குமா? நாளைக்கே திருப்பித் தரேன்".

"அதுக்கென்ன. இந்தாங்க பத்து ரூபாய்".

புறப்பட்டு பஸ் ஸ்டாண்டுக்குப் போனார்கள்.

• • • • •

"அண்ணே ஏதாச்சியும் நாஷ்தா செய்யறீங்களா?"

"வயிறு சரியில்லே. இருந்தாலும் அப்புறம் கோர்ட்டுக்குப் போனா சாப்பிட நேரம் இருக்காது. எப்ப வழக்கை கூப்பிடப் போறாங்களோன்னு அங்கேயே பழி கிடக்கணும்".

ஓட்டலுக்குள் நுழைந்தார்கள்.

"சாப்பிடுங்கண்ணே கூச்சப்படாமல்".

நாகமுத்துகூச்சப்படாமல்சாப்பிட்டான். பில் பத்து ரூபாய் ஐம்பது பைசா.

• • • • •

வக்கீல் வீட்டுப்படி ஏறும்போது குமாஸ்தாவிடம், "கும்பிடறேன் சாமி" என்றான் நாகமுத்து. சொல்லிவிட்டுக் கண்ணடித்தான்.

"ஓகோ, வழக்கு இன்னிக்கா".

"ஆமாம். எப்படியும் எடுத்து நடத்திடணும்".

"செஞ்சாப் போச்சு".

"வேலாயுதம், உன் கையாலே சாமிகிட்டே பத்து ரூபாய் கொடுத்திடு — எப்படியும் அவர் காரியத்தை முடிச்சுடுவார்".

பத்து ரூபாயை வாங்கிக் கொண்ட குமாஸ்தா, "எதுக்கும் நீ அய்யாவைப் பாத்து விடு, நாகமுத்து" என்றார்.

• • • • •

அரை மணி கழித்து வக்கீல் அறையை விட்டு வந்த நாகமுத்து. "வேலாயுதம், ஒரு

முப்பது ரூபாய் எடு. வக்கீலுக்குக் கொடுக்கணும்'' என்று கேட்டு வாங்கிக் கொண்டான்.

அதில் சரிபாதி ரூபாய் அவன் பாக்கெட்டுக்குச் சென்றது என்பது வேலாயுதத்தின் சிற்றறிவுக்கு' எட்டவில்லை.

* * * * *

கோர்ட்டுக்கு வந்தார்கள்.

''அடடா, என்ன வெய்யில், என்ன வெய்யில்''.

''சோடா, கலர் சாப்பிடறீங்களா, அண்ணே''

''இளநீர் இருக்கா பாரு. சோடா, கலர் ஒரே க்யாஸ். வயத்துக்கு ஒத்துக்காது''.

மூன்று ரூபாயை இளநீர்காரனிடம் கொடுத்தான் வேலாயுதம்.

* * * * *

கோர்ட் இடை வேளைக்குக் கலைந்தது.

''என்னண்ணே. நம்ம வழக்கு கூப்பிடலியே''

''எடுத்து வைச்சிருக்காங்க. மாலையில் மறுபடி கோர்ட் கூடியதும் கூப்பிடுவாங்க''



சௌமியா கேரளாவில் ஒரு சினிமா நட்சத்திரத்திற்கு இணையான புகழ் பெற்ற ஐந்து வயது சிறுமி! மாஜிக் உலகில் மிக குறைந்த வயது மாஜிக் நிபுணர். எரிந்து கொண்டிருக்கிற மெழுகுவர்த்தியை சௌமியா தொட்டால் அது அழகிய மலர் கொத்தாக மாறும். எலும்புக்கூடு இவர் சைகயசைத்தால் ஆடும். பாடும்.

சௌமியாவுக்கு மாஜிக்கில் ஈடுபாடு இருப்பதை உணர்ந்த உடனேயே மலையாத்., கோபிநாத் போன்ற சிறந்த மாஜிக் நிபுணர்களிடம் முறையான பயிற்சிக்கு அனுப்பினார் தந்தை. அப்போது அவளுக்கு மூன்று வயதுதான். இப்போது உலகப்புகழ் பெற்ற மாஜிக் நிபுணர்



அவள். உலக மாஜிக் நிபுணர்கள் மாநாட்டில்கலந்துகொள்ளுமாறு நியூயார்க்கிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது!

ஆதாரம்: வீக்எண்ட் — இலீபன்

"எப்படியாவது நடந்துடும்படியாய்ச் செய்துடுங்க அண்ணே. என்னாலே அலைய முடியல்லே".

"கண்டிப்பாய் நடக்கும். இன்னிக்கு எப்படியும் நடக்கும்னு நான் சொல்றேன். வக்கீல் குமாஸ்தா சொல்றார். வக்கீலும் சொல்றார். உனக்கு நம்பிக்கையில்லையா?"

"நம்புறேன் அண்ணே".

* * * * *

நாகமுத்து கோர்ட் சேவகன் ஒருவனிடம் பேசிவிட்டுவந்து, "அடுத்தது நம்ம கேஸ் தானும். பிள்ளைக்குட்டிக்காரன். காலையிலே ஆறுமணிக்குவந்தா ராத்திரிபத்துமணிக்குத் தான் போறானும். ஒரு ஐந்து ரூபாய் கொடு பாவம்."

ஐந்து ரூபாயை சில்லறையாக வாங்கிக் கொண்டு இரண்டு ரூபாயை மட்டுமே பியூனிடம் தந்தான் நாகமுத்து.

* * * * *

மறுபடி மாலே மூன்றரைக்கு கோர்ட் கூடியபோது உள்ளே போய் வந்தான் நாகமுத்து.

"அவசரமாய் இன்னிக்கே வழக்கை எடுக்கணும்னு மனு போடணுமாம். எழுத்துக் கூலி. கோர்ட் செலவு எல்லாம் பத்து ரூபாய் ஆகும்" என்றான்.

"பத்து ரூபாயா?"

"ஆமாம்".

"கண்டிப்பாய் நடக்குமா?"

"அதுக்குத்தானே மனுப் போடணும்".

"சரிங்க. இந்தாங்க. பத்து ரூபாய்".

எப்படி எப்படியோ பங்கு போட்டதில் நாகமுத்துவுக்கு ஆறு ரூபாய் கிடைத்தது.

* * * * *

மாலே ஆறுமணிக்குக் கோர்ட் கலேந்தது.

வேலாயுதம் வழக்கு ஏப்ரல் முதல் தேதிக்கு ஒத்திப் போடப்பட்டது.

வக்கீல் எங்கார்:

"அடுத்த மாதம் முதல் தேதி அவசியம் நடத்திப்புடலாம். கோர்ட்கள் கோடை லீவுக்குச் சாத்தும் நேரம். அப்பொழுது பல பேர் வரமாட்டாங்க. நாம முடிச்சுடலாம்".

வக்கீல் குமாஸ்தா வந்தார்:

"ஏப்ரல் முதல் தேதி. சாட்சிகளுக்கு படி கட்டிடலாம். பணம் எடுங்க".

நாகமுத்து சொன்னான்:

"ஆமாம். அவசியம் அடுத்த வாய்தாவில் நடத்திடுவோம். சாட்சி சம்மனுக்கு எவ்வளவு ஆகும்"!

"முப்பது ஆகும்".

"கொடுத்து விடு வேலாயுதம்".

"கையிலே இன்னும் நாலு ஐந்து ரூபாய் நோட்டுத்தான் இருக்கும். இன்னிக்கு கேசே எடுக்கவில்லே. மொத்த செலவு எண்பது ரூபாய்"

"ஆமாம். வழக்குன்னு இப்படித்தான். சரிங்க குமாஸ்தா. ஊருக்குப் போய் அனுப்புவார் வேலாயுதம். படிகட்டி அடுத்த வாய்தாவுக்கு சாட்சிகளை விசாரிக்க ஏற்பாடு செய்யுங்க"

"கவலேப்படாமல் ரூபாய் தாங்க. ஏப்ரல் முதல் தேதி எந்த ராஜா எந்த பட்டணம் போனாலும் கேஸ் நிச்சயம் எடுத்துப் பிடலாம்"

வேலாயுதத்தின் முகம் தொங்கிவிட்டது.

இப்போது வேலாயுதம் கூட ஊர் திரும்பினால் வேலாயுதம் ஏதாவது கேட்பானே என நினேத்து. "வேலாயுதம், நீ ஊருக்குப் போ. நான் வக்கீலிடம் இன்னும் கொஞ்சம் ஸ்ட்ராங்காய் சொல்லிட்டு அடுத்த பஸ்ஸில் வரேன்" தொங்கிய முகத்துடன் நின்றவனிடம் சொன்னான் நாகமுத்து.

"பஸ்ஸுக்கு இந்தாங்க" என்று ரூபாய் ஐந்தை வேலாயுதம் நாகமுத்துவிடம் கொடுத்தான்.

"பாவம். உனக்கு ஏகப்பட்ட செலவு".

"செலவு கிடக்கட்டும் அண்ணே. செலவு செய்தும் பலன் இல்லேயே".

"பயப்படாதே அடுத்த ஏப்ரல் முதல் தேதி நிச்சயம்".

வேலாயுதம் பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தான். நாகமுத்து வக்கீல் வீட்டுப் பக்கம் நடந்தான்.

நாகமுத்து சொல்லிக் கொண்டான், மனதிற்குள்; ''வேலாயுதம், நீ கேசை எடுக்கச் சொல்றே. நானே நீ அறியாமல் குமாஸ்தாவிடமும், வக்கீலிடமும் எப்படியாவது ஒத்திப் போகும்படி செய்யுங்க என்று சொல்லி வைத்திருக்கிறேன். அது தான் என் சாமர்த்தியம்.''

* * * * *

பஸ் ஸ்டாண்டுக்கு போன வேலாயுதம் அங்கே பிரதிவாதியைப் பார்த்தான்.

ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்கள் இருவர் பார்வையிலுமே ஏதோ பரிதாபம் தெரிந்தது.

''கொஞ்சம் உக்காந்து பேசுவோமா'' என வேலாயுதம் கேட்க பிரதிவாதியும் சம்மதித்து எதிரே இருந்த மைதானத்தில் உட்கார்ந்தார்கள்.

ஒரு மணி நேரம் மனம் விட்டுப் பேசி விட்டுத் திரும்பினார்கள்.

* * * * *

மறு நாள் கோர்ட் கூடியது.

இருவரும் கோர்ட் ஹாலுக்குள் நுழைந்தார்கள்.

''கனம் கோர்ட்டாரவர்களே, நாங்க இரண்டு பார்ட்டியும் எங்க வழக்கை கோர்ட்டுக்கு வெளியே சுமுகமாய் தீர்த்துகிட்டோம். கேசை எடுத்துத் தள்ளிடலாம்''.

''கேஸ் நம்பர் எல்லாம் தெரியணும். இரு தரப்பு வக்கீல்களையும் கூட்டி வாங்க''.

''கேஸ் நம்பர் ஒ. எஸ். 1718/1983. கேஸ் மேல் கொண்டு நடத்துவதாய் இருந்தால்தானே வக்கீல்கள் வரணும். நாங்க வழக்கை சுமுகமாய் தீர்த்துகிட்டோம். வக்கீல்கள் எதற்கு? கேஸை தள்ளிடலாம்''.

வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

* * * * *

நீண்ட காலமாக வழக்கு நடப்பது, ஊரில் விவசாயத்தையோ, சொந்த வேலைகளையோ நிம்மதியாய் செய்ய முடியாமல் இருப்பது, இரு பார்ட்டிகளும் சமாதானமாக போய் விடாமல் வெகு ஜாக்கிரதையாய் அவர்களை நெருங்க விடாமல் செய்யும் டவுட்டுகளின் அடாவடித்தனம், ஒவ்வொரு வாய்தாவுக்கும் தாங்கள் பட்டினி கிடந்து டவுட்டுகள் வயிற்றையும் பர்ஸையும் நிரப்பும் அசாதாரண நிலை, அனாவசிய செலவுகள் இவைகள் எல்லாம் அப்போதுதான் அந்த இருபார்ட்டிகள் மூளையில் உறைத்திருக்க வேண்டும்.

அதனால்தான் புத்திசாலித்தனமாய் வழக்கை பேசி தீர்த்துக் கொண்டார்கள்.

'டவுட்கள் நம்மைப் பாடாய்ப் படுத்திய பின் தானே நமக்குப் புத்தி வந்தது. வாழ்க டவுட்கள்!' என்று கூறிச் சிரித்துக் கொண்டார்கள்.

---

''உங்களைப் பிடிச்சுக்கட்டுமா?''

''உம்.''

''மேல சாஞ்சிக்கட்டுமா?''

''சாஞ்சிக்கோயேன். என்ன இது? ஒவ்வொண்ணுக்கும் கேள்வி கேட்டுக்கிட்டு. நா ஒம் புருஷன்தான? வேத்தாளா?''

''அதுக்கில்ல. இது நம்ம வீடா? நடு ரோடாச்சே, அதனலதான் கேட்டேன்.''

''ஆமாமாம். கூட்டம் நெரியுது பாரு. அத்தன கண்ணும் நம்ம மேலதான் மொய்க்குதாக்கும், வெக்கமாத்தான் இருக்கும்.''

ரமா சிரித்தாள். அவர்கள் நடந்து போகவென்றே துப்புரவாகத் துடைத்துவிட்டது மாதிரி வெறிச்சிட்டிருந்த தெருவைப் பார்த்தாள். நிலா பாலாய் காய்ந்திருந்தது.இந்தக் குளுமையைத் தவிர்த்துக் கதவடைத்து மின் விசிறிக் காற்றில் சூடாகி டெலிவிஷனில் ஆழ்ந்து போயிருக்கிற ஜனங்களை நன்றியோடு நினைத்தாள். ஸ்ரீ ராமை நெருங்கி, அணைத்துக் கொண்டாள். வயிற்றுச் சுமை தாளாமல் மூச்சிரைக்க, நிதானமாய் நடத்திச் செல்லப்பட்டாள்.

ஸ்ரீ ராம் அவள் காதோரம் குனிந்தான்.

''நம்ம ராஜ்யம்தான். யாரு பாக்கறுங்க நம்பளை?''

சௌம்யா பார்த்துக் கொண்டிருந்தாள். மாடி ரூமில் விளக்கணைத்து ஜன்னலோரம் நின்று, கண்ணீர் முடிவில்லாமல் வெப்பக் கோடு போடப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

• • •

# பத்து மாசத்துக்கு ஒரு இடம்



அன்று ஸ்ரீ ராம் ஸ்கூட்டர் ஸ்டார்ட் செய்த பிறகுதான் கவனித்தான். கைக் குட்டையை மறந்து போயிருந்தான். வாசலிலிருந்து இரைந்தான். மனைவி ரமா ஓடிவந்தாள். பக்கத்து மாடியில் சௌம்யாவும் ஓடி வந்தாள். அன்றுதான் ஸ்ரீ ராம் அவளைப் பார்த்தான். அதற்கப்புறம் தினமும் பார்த்தான். நானாவட்டத்தில் அறிமுகப் புன்னகைகள். ஹலோக்கள். வழியில் நின்று ஓரிரு வார்த்தைப் பரிமாற்றங்கள்.

ஸ்ரீ ராம் சௌம்யாவைக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிந்துகொண்டான். அவள் பலஹீனம் புரிந்து புத்திசாலித்தனமாய் நகர்ந்தான்.

ஒரு ஜனவரி மாதத்துக் குளிர் காலை. மணி ஏழு. சௌம்யா ஏழரைக்குக் காலேஜில் இருக்க வேண்டும். அவசரமாய் அலங்கரித்து ஒரு வாய் அள்ளிப் போட்டுக்கொண்டு பஸ் ஸ்டாப்பிற்கு ஓடினாள்.

''என்ன இத்தனை வேகமா காலேல எங்க போறீங்க?''

சௌம்யா ஓட்டம் நின்றது. மூச்சுவாங்க தயக்கமாய் நின்றாள். ஸ்ரீ ராம் ஸ்கூட்டரை அவள் பக்கமாய்த் தள்ளி நிறுத்தினான். முகம் சாதாரணத்துக்கும் மேலான அழகில் பளிச்சென்று இருந்தது. ஒரு ஆணுக்கு இது அதிகம். அழகான இளம் மனைவி வீட்டிலிருக்கிற ஆணுக்குக் கூட அதிகம். தானாக வலிய வந்து விழுகிறதைக் குற்ற உணர்வின்றிப் பற்றிக் கொள்வது சுகம்.

''எங்க போறீங்கன்னு கேட்டேன். பதிலையே காணுமே?''

''ம்... காலேஜுக்குப் போறேன்...''

''இவ்வளவு சீக்கிரமா...?''

''நாங்க பிக்னிக் போறோம். ஏழரைக்குப் பஸ் கிளம்பும். லேட்டாயிடுச்சு. அதான் ஓடறேன்.''

ஸ்ரீ ராம் ஒரு நிமிடம் மௌனமாய் இருந்தான்.

''அவங்களோடதான் போகணுமா?''

சௌம்யா அதிர்ந்து போய் அவனைப் பார்த்தாள்.

''என்னோட வாங்... யேன். நா அழைச்சிட்டுப் போறேன்...''

சௌம்யா பயத்தை மறைத்துக்கொண்டு மெலிதாய்ப் புன்னகைத்தாள், என்ன விளையாட்டு என்கிற மாதிரியாய்.

''சீரியஸாத்தான் கேக்கறேன். வாயேன். ஒருநாள் சந்தோஷமா இருப்போம்.''

சௌம்யா தலைகுனிந்தாள். ஒரு நிமிடம் மௌனமாய் இறுகிப் போய் நின்றாள். அப்புறம் நடந்தது எதுவும் நினைவில்லை. அந்த நாள் ஏதோ கனவு மாதிரி முடிந்து போனது. சுகமா, கஷ்டமா என்று புரியாமல் முடிந்து போனது. சரியாக 20 நாள் கழித்துப் புரிந்தது. தலையில் மண்ணை வாரிப் போட்டுக்கொண்டிருக்கிறோம் என்பது. மண் என்று



குடிபோதையில் கார் ஓட்டுவதினால் விபத்துக்கள் ஏற்படுகின்றன. அமெரிக்காவில் குடித்துவிட்டுக் கார் ஓட்டுவது சட்ட விரோதம். டாக்ஸிக்காரர்கள், "நீங்கள் குடிக்க வேண்டுமானால் நாங்கள் உங்களுக்குக் கார் ஓட்டுகிறோம்" என்று டாக்ஸி மீதே விளம்பரம் செய்கிறார்கள்.

—பார்வதி நாகராஜன்.




னும் சாதாரண மண் இல்லை. சேறு. வழியில் போகிறவர்கள் முகம் பொத்திப் பார்க்காமல் போகிற சேறு.

உடம்பு பூராவும் பயக்கொதிப்பில் தகிக்க இழுத்துப் போர்த்திய புடவையோடு தெரு முனையில் நின்று விரைந்து போகிறவனை நிறுத்தினாள் மூச்சு வாங்க. உதடு துடிக்கப் பேசினாள்.

"நில்லுங்க. உங்களோட கொஞ்சம் பேசணும்."

ஸ்ரீ ராம் நின்றான். அந்த நிமிடத்தை எதிர்பார்த்தவன் மாதிரிப் பதற்றமின்றி இருந்தான். மெலிதாய்ச் சிரித்தான். "ஈஸி, ஈஸி..." என்று தட்டிக் கொடுத்துப் பக்கத்திலிருந்த கார்டனுக்கு அழைத்துப் போனான். சௌம்யா தள்ளி அவன் எதிரில் உட்கார்ந்து கொண்டாள். பேச வேண்டியதை மனதில் நினைக்கையிலேயே கண்ணிலிருந்து சரசரவென்று ஜலம் வந்தது. மானசீகமாய் மார்பில் அறைந்து கொண்டாள். தலையை சுவரில் மோதினாள். விழுந்து புரண்டாள்.

படபடப்பு ஓய்ந்து சமாதானம் ஆகும் வரை ஸ்ரீ ராம் பொறுமையாக இருந்தான்.

"ஒண்ணும் கவலைப்படாத. இதைக் கலைக்கறது பெரிய காரியமில்லை. இப்பவே வா. என் ஃப்ரெண்ட் ஒத்தன் டாக்டரா இருக்கான். போய்ப் பாத்துருவோம்."

"மாட்டேன். இதுக்கு நா சம்மதிக்க மாட்டேன். எனக்கு என் குழந்தை வேணும். உங்க குழந்தை வேணும்...

ஜன்னி வந்த மாதிரி அவள் புலம்புவதைப் பார்த்து ஸ்ரீ ராம் சற்று பயந்து போனான். இதை எதிர்பாராததால் அதிர்ந்து போனான்.

சௌம்யா உறுதியாய் இருந்தாள்.

"பயப்படாதீங்க. உங்களைக் காட்டிக் குடுக்க மாட்டேன். இப்பலேந்து பத்து மாசம் நா இருக்க எடம் பாத்து வையுங்க. குழந்தை பிறந்ததும் வேலை தேடிப்பேன். ஆயா வெச்சுப் பார்த்துப்பேன். எங்காவது.. எந்த ஊரானாலும் பரவாயில்லை. பணத்தைப் பத்திக்கூட கவலைப்படாதீங்க... என்னோட வளையல், சங்கிலி, நெக்லஸ் எல்லாம் இருக்கு. வித்து சமாளிச்சிக்கலாம். எனக்கு வேண்டியது ஒரு துணை. அதுவும் குழந்தை கையிலே வரவரைக்கும் அதுகூட வாரம் ஒரு தரம் வந்து பார்த்தாப் போதும்."

ஸ்ரீ ராம் முகம் வெளிறப் பார்த்தான். இது ஏதோ சிக்கலுக்கு இழுக்கிறது. ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

"குழந்தை மாதிரி பேசற சௌம்யா. இதுல எவ்வளவோ கஷ்டமிருக்கு. வாழ்க்கை பூராவும் அழப் போறியா... யோசிச்சுப் பாரு."

"நிறைய யோசிச்சாச்சு. எனக்குப் புரியுது. நீங்க பயப்படறீங்க. உங்களை மாட்டி வெச்சுருவேன்னு கவலைப்படறீங்க. மாட்டேன். இதும் மேல சத்தியம்."

கண் சிவக்க வயிறைத் தொட்டுச் சத்தியம் செய்தாள். அந்தச் சிவப்பு அவன் நெஞ்சைத் தகித்தது. மேலும் ஒரு நிமிடம் அவள் முகத்தைப் பார்த்தால் சம்மதித்து விடுவோம். ஸ்ரீ ராம் முகத்தைத் திருப்பிக் கொண்டான். இன்றைக்கு இது போதும்.

"சரி, எழுந்திரு. நாளைக்குப் பேசிப்போம். நேரமாவுதில்லே?"

சௌம்யா பிடிவாதமாய் இருந்தாள். ஸ்ரீ ராம் யோசித்தான். இந்தப் பெண்ணிடம் நல்லதனம் எதுவும் சாதிக்காது. மிரட்டினால் தான் வழிக்கு வரும்.

மறுநாள் காலேஜ் வாசலில் ஸ்கூட்டரோடு காத்திருந்தான்.

"சௌம்யா...!"

"என்னங்க?"

கையில் புத்தகங்களை அணைத்தபடி நின்றாள்.

"ஸ்கூட்டரில் ஏறு."

"எதுக்குங்க? முடியாது. காலேஜ் போகணும்."

"மரியாதையா ஏறு... இல்லேன்னா ஒரு அறை குடுத்து இழுத்து உக்கார வைப்பேன். எல்லாரும் நின்னு வேடிக்கைப் பார்ப்பாங்க. ப்ரின்ஸிபாலுக்கு எழுதிப் போடுவேன். கெட்டழிஞ்ச பொண்ணுங்களுக்குக்

ஸ்ரீ சாயிராம் துணை

# MMDA

சென்னை பெருநகர் வளர்ச்சிக் குழுமம்
மிகப் பிரம்மாண்டமாக உருவாக்கிவரும்

## மறைமலை நகரினை அடுத்து

சிங்கப்பெருமாள் கோவில் அருகில்
அமைந்துள்ளது எமது



# ஸ்ரீ சத்குரு நகர்

**தமிழக அரசு அங்கீகார எண்: CR/ DTCPM: 83 – 160 LP 123**

தென் சென்னைப் பகுதியில் இந்தப் பகுதிதான் மிகவேகமாக வளர்ச்சியடைந்து வருகிறது! இப்போதே மிகக்குறைந்த விலையில் 'லியோ' வழங்கும் வீட்டு மனையை வாங்கி வீடு கட்டி வசதியாக வாழுங்கள்!! இந்த மனைப்பிரிவில் 500க்கும் அதிகமான வீட்டு மனைகள் உள்ளன. அகலமான சாலைகள், பள்ளிக்கூடம், மருத்துவமனை, சமூக நலக்கூடம், சிறுவர் விளையாடும் இடம், பூங்காக்கள் இவையனைத்திற்கும் இடம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

**நல்ல குடிதண்ணீர் ஏராளமாக கிடைக்கிறது.**

---

ஒரு மனை (1800 சதுர அடி) விலை **ரூ. 2450** உடனடியாக முழுத் தொகையை செலுத்துபவர்களுக்கு ரூ. 250/- விசேஷ தள்ளுபடி உண்டு.

---

**சுலப தவணையில் வாங்க:**

**அட்வான்ஸ் ரூ. 500/- மீதத் தொகையை 10 மாதங்களில் செலுத்தலாம்.**

மனையை பார்வையிடும் இடத்தில் மனை ஒன்றுக்கு ரூ. 100/- வீதம் டோக்கன் அட்வான்ஸ் செலுத்தி மனைகளை ரிசர்வ் செய்து கொள்ளவும். மனைகளை பார்வையிட ரூ. 10/-கட்டணம் செலுத்தி உங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ளவும்.

**இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிடாதீர்கள்! உடனே முந்துங்கள்!!**
**7-4-85 (ஞாயிறு) காலை 9:30 மணியளவில் மனைகளைப் பார்வையிட எமது அலுவலகத்திலிருந்து அழைத்துச் செல்லுகிறோம்.**

மேலும் விவரங்களுக்கு நேரில் அணுகவும் போன்: **443979**




# லியோ

## ரியல் எஸ்டேட்ஸ் (REGD)

**81, மேட்லி ரோடு (மாடியில்)**
**தி.நகர், சென்னை-600017**
தி.நகர் பஸ் நிலையம் & மாம்பலம் ரயில் நிலையம் அருகில்

வீட்டுமனை விற்பனைத்துறையில் இது ஓர் நம்பகமான கைராசி ஸ்தாபனம்
ஞாயிறு அலுவலகம் உண்டு ★ செவ்வாய் வார விடுமுறை.

JOHN



# இயற்கைக் காட்சி

## போட்டி 49

இயற்கை எழிலை ரசிக்காத இதயம் இறைவனை உள்ளத்தில் உணர முடியாது. நீங்கள் அனுபவித்த ஓர் இயற்கைக் காட்சியை எளிய தமிழில் இலக்கிய நயத்தோடு கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்கு குலுக்கல் முறையில் பட்டுப்புடவை. உறையின் மேல் "இயற்கைக் காட்சி" என்று கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும்.

**முடிவு தேதி: 22.4.85**

கடைசி நாலு பட்டுப் புடவைகளைப் பெறப் போகும் அதிர்ஷ்டசாலிகளுள் ஒருவராக நீங்கள் இருக்கலாம்!

என் பெயர்: ..............................................

விலாசம் : ..............................................

..............................................

பட்டுப்புடவை பரிசுத்திட்டம்

காலேஜ்லே ஏன் எடம் தரீங்களா?"

நர்ஸிங் ஹோம், நகர எல்லையில் இருந்தது.

ஹலோ சொன்ன டாக்டர் நண்பன் வியப்பும் பொய்யான வருத்தமுமாய் ஸ்ரீ ராம் சொல்வதைக் கேட்டான். சௌம்யாவைப் படுக்க வைத்து டெஸ்ட் பண்ணினான். மருந்தேற்றி இஞ்செக்ஷன் கொண்டு வந்தான்.

அதுவரை பேசாதிருந்தவள் வாய்விட்டுக் கதறினாள்.

"வேண்டாங்க, ப்ளீஸ்! புண்யமாப் போகும். நீங்க எனக்கு எதுவுமே செய்ய வேண்டாம். விட்டுருங்க. எங்காவது ஓடிடறேன்."

டாக்டருக்குக் கூடக் கண் கலங்கிப் போயிற்று. என்ன மனிதன் இவன்? என்று நண்பன்மேல் ஆத்திரம் வந்தது. 'கடவுளே, இந்தப் பெண்ணுக்கு நல்ல வாழ்க்கையைக் கொடு. வேறு சந்தோஷங்கள் கொடு."

அரைமணியில் எல்லாம் முடிந்து போனது. அப்புறம் சௌம்யா பேசவேயில்லை. சாயந்திரம்வரை அங்கேயே இருந்து, அழைத்து வந்து தெரு முனையில் விட்டுச் சமாதானம் சொல்லிப் பிரிந்தபோதும் பேசவில்லை.

ஆனால் அதற்கப்புறம் தனக்குள் நிறையப் பேசிக் கொண்டாள். வந்த சுவடு தெரியாமல் மறைந்து போன குழந்தையோடு நிறைய பேசினாள்.

சௌம்யா படுக்கையைப் பிரித்துப் போட்டாள். ஒருக்களித்துப் படுத்துக் கொண்டாள். பக்கத்திலிருந்த வெற்றிடத்தை மெல்லத் தட்டினாள். சின்னச் சின்ன, இனிய பாட்டுக்கள் மெலிதாய்ப் பாடினாள். குனிந்து முத்தமிட்டாள். அப்படியே உறங்கிப் போனாள்.

• • • • •

ரமாவுக்கு வலி எடுத்தது. ஆபீஸ் கிளம்பியவனைத் தடுத்தாள். டாக்ஸி வைத்து நர்ஸிங் ஹோம் போய் அவளைச் சேர்த்து ஸ்ரீ ராம் வெளியே காத்திருந்தான். வலி தாளாமல் அவள் கத்துவது நெஞ்சைப் பிசைக்க அங்கிருந்து சற்றுத் தள்ளி எதிரே இருந்த புங்க மரத்து நிழலில் நின்றுகொண்டான்.

கையைக் கட்டி அங்கும் இங்குமாய் அலைந்தான். சத்தமாய்த் துடிக்கிற நெஞ்சைத் தடவிக் கொண்டான். வெள்ளை உடையணிந்த மலையாள நர்ஸ், தன்னை நோக்கி வருவதாய் நினைத்து நூறு தரம் நிமிர்ந்து பார்த்துவிட்டான். ரோஜா புஷ்பமாய் இருந்த சிசுவைக் கைநீட்டி நூறுதரம் வாங்கிக் கொண்டான். உடல் சிலிர்க்க நெஞ்சோடு அணைத்துக் கொண்டான்.

நர்ஸ் தலை தெரிந்தது. ஒரே தாவில் அவள் அருகில் போய் நின்றான். நர்ஸ் அவனை ஒரு கணம் பரிதாபமாய்ப் பார்த்தாள்.

அப்புறம்...

'பேபி போயிடுச்சு'' என்றாள்.


"கார்டனர் சார், இந்த ரோஸ் கலர் பூவிற்கு என்ன பெயரு?"


"ஹாய் பயா, ஹவ் ஆர் யூ?"

# ஊட்டிக்கு வந்த உமா


"அடுத்த வருஷம் நீங்க ஒண்ணும் சீஸனுக்கு வர வேணும்!"


"தம்பி என்னே போட்டோ எடுக்கறையா எடு எடு!"

# ப.உ.ச.வை

* பி. ராஜேந்திரன், செங்கற்பட்டு.

? ஈரான் — ஈராக் போரை நிறுத்த தூது வரை அனுப்பும் ராஜீவ் இலங்கைத் தமிழர் பிரச்னையில் மௌனம் சாதிப்பது ஏன்? தமிழன் என்பதால் இளப்பமா?

! இலங்கைத் தமிழர் பிரச்னையில் அவர் கவனம் செலுத்தாமல் இல்லை. போதிய கவனம் செலுத்தவில்லை என்று வற்புறுத்துங்கள். ஆமோதிக்கிறேன். ஈரான்—ஈராக் பிரச்னையில் அவர் தலையிட்டு அமைதி விளைவிக்கப் பார்ப்பதைக் குறைகூற வேண்டாம். அதையும் இதையும் முடிச்சுப் போடவும் வேண்டாம். உலகில் அமைதியை நிலை நாட்ட யார் ஒரு சிறு முயற்சியை மேற்கொண்டாலும் அந்த முயற்சி வரவேற்கப்பட வேண்டியதே. வாழ்த்துக்குரியதே.

* எம். ஏ. பாஷா, சின்ன சேலம்.

? என்ன இல்லை என்று மாதவியை நம்மவர் புறக்கணிக்கிறார்கள்?

! அதிர்ஷ்டம்.

* நெல்லை சுவாதி, சென்னை—33.

? நினைத்தாலே எரிச்சல் வரும் விஷயம்?

! நாம் மிகவும் மதிப்பு வைத்திருக்கும் ஒரு மூன்றெழுத்துக்காரர் தேவையின்றி இன்னொரு மூன்றெழுத்துக்காரரை ''மகான்'' அது இது என்று ஒரேயடியாகத் தகுதி மீறியும் அளவுமீறியும் புகழ்ந்து ஐஸ் வைப்பது போல் பேசும்போது... எரிச்சலாய்த்தான் இருக்கிறது.



• இளப்பமா?

• முந்தாநாள்

* வண்ணை கணேசன், சென்னை—11.

? ஸ்ரீதர் புதுமுகங்களை அறிமுகப்படுத்துவதற்கும், பாரதி ராஜா அறிமுகப்படுத்துவதற்கும் என்ன வேறுபாடு?

! அந்தக்கால ஸ்ரீதரை விட்டுவிட்டு இன்றைய நோக்கில் ஸ்ரீதரையும் பாரதிராஜாவையும் இது விஷயத்தில் ஒப்பிட்டால் பாரதிராஜா அறிமுகப்படுத்தும் புதுமுகங்கள் நிலைக்கிறார்கள்.

* எஸ். எஸ். வாசன், தென் எலப்பாக்கம்.

? தமிழக மந்திரி சபை பற்றி...?

! (அ) சொல்வதற்கு என்ன இருக்கிறது? (ஆ) சொல்லாமல் இருப்பதே மேல்! (இ) சொல்லி ஆவதென்ன? (ஈ) ஏனோ தானோ என்று ஏதோ இருந்து கொண்டிருக்கிறது — உங்களுக்குப் பிடித்தமான பதிலை 'டிக்' செய்து கொள்ளவும். எந்த பதிலை 'டிக்' செய்தாலும் முழு மார்க்!

* எம். செல்லையா, சாத்தூர்.

? நாடகம் என்றதும் தங்கள் நினைவில் நிற்பவர் யார்?

! முந்தாநாள் — நவாப் ராஜமாணிக்கம்; நேற்று — டி. கே. எஸ். சகோதரர்கள்; இன்று —பூர்ணம்.

* கே. கணேஷ், சென்னை.

? விமர்சனத்துக்கும், கண்டனத்துக்கும் உள்ள வேறுபாடு?

! கண்டனம் என்பது குறை கூறுவது மட்டுமே. விமர்சனம் நல்லதைப் பாராட்டிக் குறைகளை எடுத்துக் காட்டுவது. ஆக்கபூர்வமான யோசனைகளும் விமர்சனத்தில் இடம் பெறுவதுண்டு. விமர்சனம், கண்டனம் இரண்டையும் ஏற்கிற மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்ளாமல் குறை கூறுவோர் மீது விரோதத்தையே வளர்த்துக் கொண்டு வருகிறோம் என்பது பொதுவாக நம்மைப் பற்றிய ஒரு விமர்சனம்.

* பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.

? இந்திய ராணுவத்தின் சிறப்பு என்ன?

! வாய்ப்புக்கள், கண் சிமிட்டி அழைத்தும் ஆட்சிக்கு வர ஆசைப்படாதது.

* லலிதா ஸ்ரீனிவாசன், சென்னை—4.

? பெண்களால் முடியாதது ஒன்றுமில்லை என்கிறீர்களே, மௌன விரதம் இருப்பது பெண்களால் முடியுமா?

! நீங்கள் உங்கள் கணவரிடம் கோபித்துக் கொண்டதில்லை போலிருக்கிறது.

* ப. மூர்த்தி, பங்களூர்.

? கோதுமை பேர ஊழல், இந்திரா அம்மையாரைக் கொலை செய்யத் திட்டம் போட்ட வழக்கு என்றெல்லாம் குற்றம் சாட்டப்பட்ட ப.உ.ச.வை அமைச்சராக்கியது சரியா?

## நீங்கள் கேட்டவை

— தராசு

# அமைச்சராக்கியது சரியா?

! அவையெல்லாம் நிரூபிக்கப்பட்டால் ராஜினுமா செய்துவிடுவதாகச் சட்டசபையில் சவால் விட்டார் ப. உ. ச. நாளிதழில் இந்தச் செய்திக்குப் பக்கத்திலேயே அவர் குடியிருக்கும் அவர் ஒரே மகன் வீட்டில் மத்திய அரசு அதிகாரிகள் சோதனை, விசாரணை நடத்தியிருக்கிறார்கள் என்ற செய்தியும் இடம் பெறுகிறது. இவ்வளவுக்குப் பிறகும் ப. உ. ச. அமைச்சர் பதவியில் நீடிப்பது ஜனநாயகத்தில் அநாகரீகம். ஜனநாயகத்தில் பதவியில் இருக்கும் ஒருவர் "நான் யோக்கியன்" என்று சொல்லிக் கொண்டிருந்தால் போதாது. அது விஷயத்தில் யாருக்கும் சந்தேகம் ஏற்படவே இடமில்லாத முறையில் நடந்துகொள்ள வேண்டும்.



* என்ன இல்லே?

* நீடிக்கலாமா?

* எஸ். ஸ்ரீநிவாசன், ஜபல்பூர்.

**? கல்கி அவர்களின் பொன்னியின் செல்வன் வாங்க விருப்பமாயுள்ளேன்... எங்கு கிடைக்கும்?**

! உங்களைப் போல் விவரம் கேட்டு நான்தோறும் எழுதும் பல அன்பர்களுக்கு இந்தப் பதில்: கல்கி அவர்களின் நூல்கள் பலவும் அச்சாகிக் கொண்டிருக்கின்றன. சீதாலட்சுமி பதிப்பகம்—வானதி பதிப்பகம் கூட்டுறவில்—திருநாவுக்கரசு தயாரிப்பாக—சீக்கிரமே விற்பனைக்கு வரும். முக்கியமாக அவரது சரித்திர நாவல்கள் முதலில் அச்சாக ஏற்பாடாகியுள்ளது. இன்னும் ஒரு மாதம் பல்லைக் கடித்துக் கொண்டு இருங்கள். பிறகு வானதி பதிப்பகம், சென்னை-17 என்ற விலாசத்துக்கு எழுதுங்கள்.

* ஏ. ம. அஷ்ரமலிவன், பண்டுதகுடி.

**? வயல் வெளியில் கிராமப்புறப் பெண்களின் பாடல்களை ரசிப்பது உண்டா?**

! நகர வாழ்க்கையின் நெரிசலில் அமுங்கிக் கிடக்கும் போது நல்ல கேள்வி கேட்டீர்கள்! கேள்வியே மனசுக்கு இதமாக இருக்கிறது... நிற்க. கிராமத்தில் உள்ள பூர்விக சொற்ப நிலத்தை உறவினர்கள் கவனித்துக் கொள்வதால் அவ்வப்போது போகும் போது காதில் விழும் ஓர் அறுவடைப் பாட்டு:

ஊரோரம் கதிரறுத்து
உரலுப் போல கட்டுக் கட்டி
தூக்கிவிடும் கொத்தனாரே
தூரகளம் போய்ச்சேர...

இன்னொரு விஷயம்: நாட்டுப் பாடல் நூல்கள் நிறையவே பிரசுரமாகியுள்ளன. குறிப்பிடத்தக்க தொகுப்பாளர்: நா. வானமாமலை. ஆர்வமுள்ளோருக்காகச் சொல்லி வைத்தேன்.

* ஏ. குமார், காஞ்சிபுரம்.

**? கன்னிப் பெண்களின் கண்களில் கவிதை இருக்கிறதாமே? படித்திருக்கிறீரா?**

! உம்... கல்யாண மேடையில் மணப்பெண்ணைக் கவனியுங்கள். எதையோ காணத் திரும்பி மணமகன் முகம் யதேச்சையாகக் கண்ணில் பட்டுவிட்டது போல் பார்க்கும் பரவசம் மின்னுவதை ரசிக்கலாம்... சரி, பக்கத்தில் பந்தக்கால் பிடித்து நிற்கிறாளே மணப்பெண்ணின் தோழி, அவளை நோக்குங்கள். முகம் சந்தோஷத்தில் மிதப்பது போல் தோன்றினாலும் அந்தக் கண்கள்... அவை மகிழ்ச்சியைப் பிரதிபலிக்க முயன்றாலும் உள்ளூரப் பெருக்கெடுக்கும் ஏக்கம் அதை மீறிக் கொண்டு விகசிப்பதைப் பார்க்கலாம்... ஆம், கன்னிப் பெண்களின் கண்களில் சத்தியமாய்க் கவிதை இருக்கத்தான் செய்கிறது!

* ரூ 10 பரிசு பெறுபவர்:

ப. மூர்த்தி,
83, பாஷ்யம் நகர்,
ஸ்ரீராமபுரம்,
பங்களூர்—21.



புத்தகத் தயாரிப்பு.

* நீடிக்க வைப்பவர்.

**நேரம் நல்ல நேரம்**

# மு.மேத்தாவிடம்
## முனைப்பான கேள்விகள்

**கவிஞர் வைரா: உங்களை கவிஞனாக்கியது எது அல்லது யார்?**

ஆரம்பத்தில் தமிழ் மீது எனக்கிருந்த தாகம், காதலின் மேல் எனக்கிருந்த மோகம் — இவை என்னைக் கவிஞனாக ஆக்கின. இந்தச் சமூகத்தின் மேல் எனக்கிருந்த கோபம் என் கவிதைக்கு ரத்தப் பொட்டு வைத்தது. இதுதான் என் கவிதைக்கு மூன்றாவது கண்ணாக முளைக்கத் தொடங்கியது. இதற்கு மேல் என்னைக் கவிஞனாக ஆக்கியது யார் என்று கேட்டால், எல்லோருமே என்னை கவிஞனாக ஆக்கி இருக்கிறார்கள். ஆனால் யார் என்னைக் கவிஞனாகக் காப்பாற்றப் போகிறார்கள் என்பது தான் எனக்கே ஒரு கேள்விக்குறியாக இருக்கிறது!

* குழந்தையுடன் கொஞ்சுவதற்குக் கொஞ்ச நேரம்.



* கவியரங்க மேடையில் அமர்ந்திருப்பவர்கள் மேத்தாவிற்குப் பிடித்தமான கவிஞர்கள்: சிற்பி, மீரா, காமராசன், சக்திக்கனல்.

**ஆர். வி. புவனா: உங்களிடம் இல்லாதது எது? இருப்பது எது?, உங்களுக்கு தேவையானது எது?**

கேள்வியைச் சற்று மாற்றி, உங்களிடம் இல்லாதவர் யார், இருப்பவர் யார், தேவையானவர் யார் என்று வைத்துக்கொள்ளவும். அப்படி வைத்துக் கொண்டால், என்னிடம் இருப்பவள் சரஸ்வதி, என்னிடம் இல்லாதவள் லட்சுமி, எனக்குத் தேவையானவள் பராசக்தி!

**பாஸ்கர்: ஒரு நுணுக்கமான அனுபவம் ஒரு கவிதையாக எப்படி உருவெடுத்தது என்று சொல்ல முடியுமா?**

ஒவ்வொரு கவிதையும் ஒரு நுணுக்கமான அனுபவத்தின் அடிப்படையில் தான் உருவாகிறது. ஆனால் சிலவற்றை நாம் சுவாரஸ்யமாக நினைவுகூர முடியும். உதாரணமாக வீட்டில் தனியாக உட்கார்ந்து சிறுகதை எழுதிக்கொண்டிருந்தேன். மனைவி கூட வீட்டில் இல்லை. தேநீர் கூட அருந்த முடியாத நிலை. எழுதும் போது ஒரு இடத்தில் 'சரணமாக' என்று எழுத வேண்டும். ஆனால் எழுதி முடித்துவிட்டுப் படித்துப் பார்த்தால் 'சரணாவாக' என்று இருந்ததும் உடனே எனக்குள் இருந்த குறும்பு, "பார்த்தியா, உனக்குள் எப்படி இன்னொரு ஆள் இருக்கிறான்!" என்று என்னையே பரிசீலனை பண்ணவைத்தது. அதன் விளைவுதான் இந்தக் கவிதை:

"கொஞ்ச நாளாக எனக்குள்
ஒரே குழப்பம்.
சரணமாக என்று டைப்
செய்யப் போனால்
சரணாவாக என்று
வந்து தொலைக்கிறது!"







• ''சோதி நிலா'' வுக்குப் பரிசு

'நானது வரை' என்று யாராவது
சொன்னால்
'மாலதி வரை' என்று
மனதில் பதிகிறது.
'இருமலா' என்று டாக்டர்
கேட்டால்
நிர்மலா முகமே நினைவுக்கு
வருகிறது.
'அரசு பதில்கள்' பக்கத்தைத்
திருப்பினால்
'சரசு பதில்கள்' என்றே
சத்தியமாய்த் தெரிகிறது!
கொஞ்ச நாளாக ஒரே குழப்பம்!
யோசித்துப் பார்த்தேன்.
அணுகினேன் நண்பரை
அவருக்கும் இந்த அனுபவம்
உண்டாம்!
ஹோட்டலில் சர்வர் 'சாதா ஒண்ணு'
என்றால்
அவரது காதில் 'கீதா ஒண்ணு'
என்று கேட்குமாம்!

இப்படி தொடர்கிறது கவிதை. கடைசியில் மருந்து என்ன என்பதைக் கண்டு பிடித்து விட்டேன்.

''நானும் ஊருக்கு போன
என் மனைவியை அழைத்து வர
வேணும்''

என்று என் கவிதை முடிகிறது.

இன்னொரு சம்பவம் எனக்கு நன்றாக நினைவில் இருக்கிறது. சாதாரணமாக என்னைப் போல உள்ளவர்களுடைய கூட்டத்திற்குப் போனாலே இருக்கிறவர்களிலேயே சின்னப் பையனாகத் தெரிபவன் நான்! ''ஒரு துண்டு, அங்கவஸ்திரம் ஏதாவது போட்டுச் செல்லுங்களேன்'' என்று நண்பர்கள் யோசனை கூறுவதுண்டு. அப்படிப்பட்ட நான் ஒரு சமயம் பெரிய மனிதர்கள் சபையில் இருக்கிறேன். ஒரு மனிதரைப் பார்த்து வணக்கமிட்டேன். வணக்க மளிப்பது நான் காட்டும் மரியாதை. வணக்கத்திற்கு பதில் வணக்கம் வரவில்லை என்று சொன்னால், அவர்கள் அவர்களையே அவமதித்துக் கொள்கிறார்கள். அந்தச் சமயத்திலே என் வணக்கம் வீணாகியது; கவனிக்கப்படாமல் போவது. அப்போதுதான் ''ஒரு வணக்கம் வீணாச்சு'' என்ற கவிதை உள்ளத்தில் பிறந்தது. அந்தக் கவிதையில், கடைசியில் கூறுகிறேன்:

'குவித்த கை தாமரைப் பூ
குலைந்தாச்சு
மணம் விரித்த மலர் ஒன்று
சருகாச்சு
காயம் படாமல் இரு கைகள்
முறிஞ்சாச்சு

புவனா: காதல்சோகத்தைப்பற்றிநிறைய கவிதைகள் எழுதியிருக்கிறீர்களே! யாரையேனும் காதலித்து ஏமாந்து போன அனுபவம் உண்டா?

ரசிகர்களுக்கு எப்போதுமே யாராவது ஏமாந்து போனால் அதைத் தெரிந்து கொள்வதிலே ஆர்வம் இருக்கும். நான் ஏமாந்து போனேனா என்பது பற்றிய கேள்விக்கு விடையை ரொம்ப காலமாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு கவிதையிலே, நான் சொல்லியிருக்கிறேன்: ''தொட முடியாத தொலைவிலே இருப்பதாக நீ கனவு காணாதே: இந்த பூமியினுடைய விளிம்பையே நீண்டி விடும் அளவுக்கு என் விரல்கள் நீளமானவை; காரணம் என் கைகள் வெறும் கைகள் அல்ல; கவிதைகள்!'' எங்கேயிருந்தாலும் நான் தொட முடியவில்லையென்றாலும் என் கவிதை தொட்டு விடும்.

• கவி வேந்தர் பட்டம் பெறுகிறார் மேத்தா!



இதே போல் இன்னொரு கவிதையில் —

"ஒரு ஜோடி சிறகுகள் வேண்டு
மென்றேன்
உல்லாசமாக உன்னோடு
பறப்பதற்கு அல்ல
தொலைதூரம் போய்
உன்னை மறப்பதற்கு"

என்றும் பாடியிருக்கிறேன். அதாவது, "உன்னைத் தொடுவேன்" என்றும் சொல்கிறேன். உன்னை மறந்துவிடுவேன்" என்றும் சொல்கிறேன்.

காதலித்திருக்கிறேன். ஒருவரை அல்ல; நிறையப் பேரைக் காதலித்திருக்கிறேன். சில பேர் கிடைத்திருக்கிறார்கள். சில பேர் நெஞ்சை உடைத்திருக்கிறார்கள்; ஆனால் எல்லோருமாகச் சேர்ந்து கவிதை படைத்திருக்கிறார்கள்! ஆனால் நான் யாரையும் காட்டிக் கொடுக்க விரும்பவில்லை.

**எஸ். அறிவு மணி:** "அம்மி குத்துவதற்கு சிற்பிகள் எதற்கு?" என்று கவிஞர் அப்துல் ரகுமான், கவிஞர்கள் திரைப்படப் பாடல்கள் எழுதுவதைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இது பற்றி தங்கள் கருத்து என்ன?

நிறையப்பேர் இது போல் கேட்கிறார்கள். அண்ணன் அப்துல் ரகுமான் மேல் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. அற்புதமான சிற்பி. என்னுடைய கேள்வி இது தான்: "அம்மி குத்துவது சிற்பிக்கு அவசியமில்லைதான். ஆனால் ஒரு சிற்பியால் அம்மி குத்தக் கூட முடியாதா?" என்பது தான் என் கேள்வி. நான் சிலை செதுக்குகிற சிற்பி என்பதை இவர்கள் ஒப்புக் கொள்கிறார்களோ என்னமோ, அம்மி குத்துபவனாக இருக்க வேண்டும் என்ற அவசியக் கனப்பாட்டை நான் உணர்கிறேன். ஏனென்றால் சிலை எங்கேயோ நினைவுச் சின்னமாய் நிற்கிறது. அம்மி வீட்டுக்கு அவசியத் தேவையாய் இருக்கிறது. நான் வீட்டுக்கு வீடு இடம் பெற வேண்டும் என்று விரும்புகிறேன்.

**சங்கரன் (கடலூர்):** சோழவரம் கார் பந்தயம் பற்றி 'கல்கி'யில் எழுதினீர்களே! அது போல் கிடைத்த வேறு சந்தர்ப்பம் உண்டா?

நிறைய சந்தர்பங்கள் கிடைத்தன. ஆனால் அந்த சந்தர்பங்களுக்கு நான்தான் கிடைக்கவில்லை! கிரிக்கெட்டைப் பற்றி எழுதச் சொல்லியிருக்கிறார்கள். வேறு பலவற்றையும் எழுதச் சொல்லியிருக்கிறார்கள். எழுதச் சொல்வது எல்லாவற்றையும் நான் எழுதுவது கிடையாது. அதற்குக் காரணம் கவிதை ஒரு விளையாட்டுச் சாதனம் அல்ல. இதைக் கொண்டு போய் எல்லா இடங்களிலும் வைக்க எனக்குச் சம்மதமில்லை. கல்கியில் நான் எழுதியது ரசமான அனுபவம். அந்தக் கவிதையை எழுதி முடிக்கும்போது நான் சொன்னேன்—

"முதலில் வறுமையின்றி எல்லோரும்
வாழும் வரம் கேட்போம்—அப்புறம்
சோழவரம் பார்ப்போம்!"

**பக்ருத்தீன்:** உங்களை மனைவியினுடைய எந்தக் கேள்வியாவது பதில் கூற முடியாமல் திணற அடித்திருக்கிறதா?

நிறைய திகைத்திருக்கிறேன்! மனைவியினுடைய எல்லா கேள்விகளுக்கும் பதில் சொல்லக் கூடியவர்கள் இங்கே யார் இருக்கிறார்கள்? ஒரு முறை, ஒரு வீடு கிடைக்க முயன்று கொண்டிருந்தேன். ஆனால் பலத்த போட்டி இருந்ததனால் கிடைக்காமல் போய் விட்டது. நண்பர்கள் சொன்னார்கள்: "வீடு கிடைக்கவில்லையே என்று வருத்தப் பட வேண்டாம். எவராலும் பறித்துக் கொள்ள முடியாத இடம் உனக்கு இலக்கிய வரலாற்றில் இருக்கிறது". என் நண்பர்கள் சொன்ன ஆறுதலையே வருத்தத்துடன் என் மனைவியிடம் சொன்னேன். அதைக் கேட்டு விட்டு என் மனைவி ஒரு வினா எழுப்பினாள்: "அது சரிதான். இலக்கிய வரலாற்றில் உங்களுக்கு கிடைத்திருக்கும் இடத்தில் நானும் என் குழந்தைகளும் வந்து குடியிருக்க முடியுமா?" நான் வாயடைத்துப்போனேன். இந்தக் கேள்வி தான் என்னை இன்றும் உறுத்திக் கொண்டிருக்கிறது. ஆனால் ஒரு சமாதானம். எனக்கு முன்னால் இருந்த மகா கவிஞர்கள் எல்லோருக்கும் இது கேள்வியாகவே இருந்திருக்கிறதல்லவா?

**இரண்டாம் நக்கீரன்:** நான்கு கவிஞர்கள் ஒரு இடத்தில் சேர்ந்து விட்டால் அங்கு ஒரு காவல் நிலையம் தேவை என்பது இன்றைய இலக்கிய மேடைகளில் காணப்படும் உண்மை. இப்படி தங்களைத் தாங்களே ஒற்றுமைப்படுத்திக் கொள்ள முடியாத இந்தக் கவிஞர்கள் தேச ஒற்றுமையைப் பற்றியும், உலக ஒற்றுமையைப் பற்றியும் எழுதுவதும் பேசுவதும் எந்த விதத்தில் நியாயம்?

கவிஞர்களை மட்டுமே குறை சொல்லிப் பயனில்லை. இந்த சமூகம் கெட்டுக் கிடக்கிறது. உண்மையான மனிதனாக மனம் வளர்த்த கவிஞர்கள், மனம் ஒன்றி இருப்பார்கள். அவர்களிடையே கருத்து வேற்றுமை இருக்கும். ஆனால் ஒருவரை ஒருவர் மனிதாபிமானத்தோடு நேசிப்பார்கள். அப்படிப்பட்ட மனம் வளர வேண்டும் என்பதைப் பற்றி நானும் எழுதியிருக்கிறேன், ஒரு கவிதையில் —

இனிமேல் மரம் நடும் விழாக்கள்
வேண்டாம்.
மனிதர்களை நடும் விழா
நடத்துங்கள்!
ஏனென்றால்
சில பேரை விட்டு வைப்பதை விட
நட்டு வைப்பது சிறந்தது!

**எஸ். வாசன்:** உங்கள் கல்லூரி வாழ்க்கையில் கவிதை எப்படி பங்கேற்றது என்பதைக் கூற முடியுமா?

நான் மாணவனாக இருந்த போதும் சரி, ஆசிரியனாக இருக்கும் போதும் சரி, கவிதையோடு எனக்கு நெருங்கிய சம்பந்தம் இருந்து

வந்திருக்கிறது. தியாகராசர் கல்லூரியில் படிக்கும் போது ஒரு தேர்வு முழுவதும், வினாக்களுக்கு கவிதையிலேயே பதில் எழுதி விருந்தேன். நான் நினைத்தேன், நிறைய பாராட்டுக்கள் கிடைக்கும் என்று. பரீட்சை முடிந்து ரிசல்ட் வந்து, பேப்பரும் வந்தது. பேப்பரைப் பார்த்தால், "நேரில் காண்க" என்றிருந்தது. திருத்திய ஆசிரியரை நேரில் பார்த்தேன். அவர் சொன்னார், "இனிமேல் இது போலதப்பெல்லாம் பண்ணக் கூடாது. கவிதையில் பதில் எழுதக் கூடாது!" என்று.

*குமார் விஜிஷா: தற்போது இளையராஜாவின் இசையில் நிறையப் பாடல்கள் எழுதுகிறீர்கள் போலிருக்கிறதே?*

இளையராஜா அவர்கள் இலக்கியவாதிகளை இதயத்திலே தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறார். காரணம் அவரும் ஒரு இலக்கியவாதி. 'இளையராஜா நல்ல ஞானவான்களை நெஞ்சில் தூக்கிச் சுமக்கிறவர். ஏனெனில் அவரும் ஒரு ஞான வாகனத்தில் பயணம் பண்ணுபவராக இருக்கிறார். அதனால் என்னைப் போன்ற இலக்கியவாதிகளுக்கு அவரது ராஜசபையில் அங்கீகாரம் கிடைத்துக் கொண்டிருக்கிறது. அந்த அங்கீகாரத்தால் நாங்களும் எழுதிக் கொண்டிருக்கிறோம். எழுத முடியாமல் இருக்கும் சிலர் வெளியே இருந்து கொண்டு ஏதோ பேசிக் கொண்டும் எழுதிக் கொண்டுமிருப்பார்கள். நாம் அவற்றைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. இதில் எந்த கிசுகிசுவுக்கும் இடமில்லை. இது ஒரு ஆழ்ந்த அனுபவம். ஆழ்ந்த ஆற்றல் இன்னொரு ஆற்றலை அறிமுகப்படுத்துகிறது. அவ்வளவுதான்.

*நெல்லை ராமநாதன்: கவிஞர் கண்ணதாசன் அவர்களுக்கும் உங்களுக்கும் ஏற்பட்ட தொடர்பைக் கூற முடியுமா?*

எவ்வளவோ சொல்லலாம். குறிப்பாக இங்கு ஓர் ஆரம்பத்தையும் அதன் முடிவையும்மட்டும் கூறுகின்றேன். கல்லூரி கவியரங்கில் அவரை முதலில் சந்தித்தேன். கவியரங்கத் தலைப்பு: "இளைஞர்களே, விழித்து எழுவீர்" என்பது. கடைசியாக உலகத்தமிழ் மாநாடு கவியரங்கத்தில் அவருடன் கலந்து கொண்டேன். எனக்குக் கொடுக்கப்பட்ட தலைப்பு: "பிரிவு". விழித்து எழுந்தோம்; பிரிந்து விட்டோம்! வாழ்க்கை போய்க் கொண்டே இருக்கிறது. வாழ்க்கையைத் தேடுவதே, வாழ்க்கையைத் தேடும் யாத்திரையே வாழ்க்கையாக இருக்கிறது! இந்த வாழ்க்கையின் யாத்ரீகனாக நானும் பயணப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

*ராஜகோபாலன்: இளைஞர்களிடம் புதுக் கவிதையால் ஒரு பாதிப்பை உண்டாக்கிய தாங்கள், வேறு புதுப் பாதையை எப்போது காட்டுவீர்கள்?*

என் வானத்தில்நட்சத்திரங்களாக இருப்பவர்கள் இளைஞர்களே! நான் கீழே இருந்து பார்த்துக் கொண்டிருக்கக் கூடிய சின்ன செடியாக இருக்கிறேன். அந்த நட்சத்திரங்கள் புன்னகைக்கும் போது, இந்த செடி பூக்கிறது. அந்தப் பூவைத்தான் கவிதைகள் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அந்தப் பூவை பறித்துக் கொண்டுபோய் கூந்தலிலே வைத்துக் கொள்கிறார்கள்; கோவிலிலே வைக்கிறார்கள்; தெருவில் எறிகிறார்கள். இதெல்லாம் அவரவர்களின் சொந்த விருப்பமாக இருக்கிறது. செடிக்கு எந்தப் பங்கும் இல்லை. ஆனால் அந்த நட்சத்திரங்கள் புன்னகைக்கப், புன்னகைக்க, புதுப் புதுப் பூக்களைப் பூக்கிறது செடி.

இந்த இளைஞர்களையெல்லாம் நான் ஆகர்ஷித்திருக்கிறேன். என்னை எப்போதும் புகழ்ந்து கொண்டே இருப்பவர்கள் இல்லை அவர்கள். மிகவும் தன் முனைப்பான வர்கள். தவறு செய்யும் போது தட்டிக் கேட்பவர்கள். அதில் எனக்கு மகிழ்ச்சிதான். "வாசிக்கத் தெரிந்த கரங்களுக்குத்தான் ராகம் புரிகிறது. நேசிக்கத் தெரிந்த மனிதர்களுக்குத் தான் நெஞ்சம் புரிகிறது" என்று நான் அடிக்கடி சொல்லுவேன் இளைஞர்கள் என்னைப் புரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால்தான், "நீ வேறு எங்கும் போய்விடக் கூடாது" என்று கண்டிக்கிறார்கள். அவர்களுக்கு நான் சொல்லிக் கொள்வேன்: "உங்கள் விழி கொடுக்கிற ஒளியில் நான் போய்க் கொண்டிருப்பேன்" இன்று ஒரு பெரிய சாதனை நடந்து கொண்டிருக்கிறது. கவிதையை வெறும் இலக்கியமாக வைக்காமல் மக்கள் இயக்கமாக மாற்றும் காலகட்டம் நடந்து கொண்டிருக்கிறது. இன்று இளைஞர்கள் கவிஞர்களை நம்புகிறார்கள். கவிஞர்களின் வாக்கு வேத கீதமாக இசைத்துக் கொண்டிருக்கிறது. மரபுக் கவிதை புதுக் கவிதையானது; புதுக் கவிதை மக்கள் கவிதையாகியது; அந்த மக்கள் கவிதைமக்கள் இயக்கமாகவளர்ந்துகொண்டிருக்கிறது. என் இளைஞர்கள் வெற்றி பெறுவார்கள். அந்த வெற்றிக் கொடியின் ஓரத்தில் என் பெயரும் எழுதப்பட்டிருக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. தன்னம்பிக்கைகளைத் தூக்கிக் கொண்டு நடக்கிறேன் — தலை கனத்தோடு அல்ல; தலையே கிரீடமாக இருக்கும் என்ற தன்னம்பிக்கையோடு நடக்கிறேன்.

தொகுப்பு: **ப்ரியன்**

---

ஒருவர்: "டாக்டர்! நேத்து 'ஆவி உலகம்'ங்கிற சினிமா பார்த்தேன் அப்பப்பிடுச்சு எதை பார்த்தாலும் கண்ணுக்கு 'ஆவி'யாட்டமா தெரியறது...

டாக்டர்: "அப்படியா? சரி... கொஞ்சம் நாக்கை நீட்டுங்க..."





இன்ஸ்பெக்டர்: நடுத் தெருவில் ஒருத்தரை ஒருத்தர் அடித்து சண்டை போட்டுக் கொண்டிருந்த உங்க ரெண்டு பேரில், யார் சண்டையை ஆரம்பிச்சது?

ஒருவன்: அவன்தான் சார்... அவன் என்னை திருப்பி அடிக்க சண்டையை ஆரம்பிச்சான்!



"அப்பா! என் 'பிராக்ரஸ் ரிபோர்டில்' கையெழுத்துக்கு பதிலா கைநாட்டு ஏன் போட்டிருக்கீங்க?"

"இவ்வளவு குறைவா மார்க்கு வாங்கியிருக்கிறவனுடைய அப்பா ஒரு படிச்சவன்னு தெரியப்படுத்திக்க எனக்கு வெட்கமாயிருக்கு... அதான்!"

"நான் சின்னச் சின்ன வீட்டு வேலைகளை செய்து எங்கம்மாவுக்கு உதவி செய்யறேன்..."

"நான் கூடத்தான் எங்கம்மாவுக்கு உதவி செய்கிறேன்..."

"எப்படி?"

"வீட்டிலே கலாட்டா பண்ணும். வெளியே போய் விளையாடறேன்..."





ஒருவன்: "என்ன டாக்டர்! தலைவலின்னு சொன்னா, நெஞ்சிலே ஸ்டெத்தாஸ்கோப் வச்சி பார்க்கிறீங்க?"

டாக்டர்: "என் பீஸை கேட்டுத் தாங்கிக்கிற அளவுக்கு உங்களுக்கு நெஞ்சில் துணிச்சல் இருக்கான்னு பார்க்கத்தான்!"

பி. பத்மநாபன்

# ஏழுநாடுகளில் எட்டு வாரங்கள்

**24**



• ஜுமேரா மசூதி.

எமிரேட் தமிழ்ச்சங்க நண்பர்கள் துபாயிலிருந்து எனக்கும் லுப்தான்ஸா விமான நிறுவனத்தாருக்கும் ஒரே சமயத்தில் கொடுத்திருந்த டெலக்ஸ் அது. என் விஸா தயாராயிருக்கிறது என்ற தகவலை விமான நிறுவனத்தாருக்கும், வரவேண்டும் என்ற அன்புக் கட்டளையை எனக்கும் தெரிவித்தது டெலக்ஸ். தயக்கம் தவிர்ந்து துபாய் செல்வது என்று முடிவு செய்தேன். இதைச் சுலபமாய்ச் செய்ய உதவிய லுப்தான்ஸாக்காரர்களை எவ்வளவு கொண்டாடினாலும் தகும்.

பிராங்க்ஃபர்ட்டிலிருந்து துபாய் வழியே மணிலா செல்லும் லுப்தான்ஸா விமானம் இரவு 9.15 மணிக்குத்தான் புறப்பட இருந்தது. ஆனாலும் விமான நிறுவனத்தார் சாமான்களை ஏற்றி இறக்கும் சிரமங்களை எனக்கு ஏற்படுத்தாமல் வியன்னாவிலிருந்தே துபாய்க்கு 'புக்' செய்து உதவினார்கள். பிராங்க்ஃபர்ட் நிலையத்தில் சாமான்களை இறக்கித் துபாய் செல்லும் ஃபிளைட்டில் ஏற்றும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். என்னிடம் கைப்பை ஒன்றைத் தவிர வேறு சுமை இல்லை.

ஆறேகால் மணிக்கு ஃப்ராங்க்பர்ட் துபாய் விமான நிலையக் கடிகாரத்தில் ஐந்து இருபதாகியிருந்தது. இரண்டு மணி நேர வித்தியாசம். பலபலவென்று விடியத் தொடங்கும் நேரம். விமான நிலைய 'அரைவல்' லவுஞ்ஜிற்குள் சென்று நின்றேன். அங்கே ஒரு வாரம் அல்லது பத்து நாட்கள் வரை யுனைடெட் அராப் எமிரேட்ஸில் 'டிரான்ஸிட்' ஆகத் தங்குபவர்களின் விஸா அநுமதிக் காகிதங்களைப் போட்டு வைப்ப

# எமிரேட் தமிழ்ச்சங்க

விமான நிலையம் என்ற குட்டி உலகத்தில் போய் இறங்கினால் டிரான்ஸிட் பயணிகளுக்கான லவுஞ்ஜில் ஏராளமான வசதிகள். மூன்று மணிநேரம் ஓடிவிட்டது.

விமானத்தில் ஏறி அமர்ந்தால் விருந்துபசாரமும், வீடியோ மூலம் காட்டிய இரண்டு திரைப்படங்களுமாக நேரத்தை விழுங்கின. துபாயில் இறங்கும்போது என் கைக்கடிகாரத்தில் மணி அதிகாலை மூன்று இருபது. தற்கான ஒரு பெரிய பிளாஸ்டிக் டிரே இருந்தது. என்னைப் போலவே 'டிரான்ஸிட்' விஸாவை எதிர்பார்த்துத் துபாயில் இறங்கிய சில ஜெர்மானியர்கள் அந்த டிரேயில் இருந்து தங்கள் விஸா காகிதங்களை தேடி எடுத்தார்கள். நானும் தேடினேன். அதாவது என் பெயருக்குரியதைத் தேடினேன்.

''அதைத் தேட வேண்டாம். உங்கள் விஸா இதோ வந்து கொண்டே இருக்கிறது'' —



• ஒரு சதுக்கம்—க்ளாக் டவர்.




* எமிரேட் தமிழ்ச்சங்கச் செயற்குழு.

என்ற தமிழ்க் குரலைக் கேட்டு நிமிர்ந்தால், "ஐ யாம் கிருஷ்ணஸ்வாமி. பிரஸிடெண்ட் எமிரேட்ஸ் டமில் அஸோஸியேஷன்" — என்றுபுன்முறுவலுடன் கைகுலுக்குவதற்குக் கையை நீட்டினார் உயரமான ஓர் இளைஞர். அவருடைய உதவியுடன் பாஸ்போர்ட், கஸ்டம்ஸ் முறைகளை முடித்துவிட்டு வெளியே வந்தால், எமிரேட் தமிழ்ச் சங்கச் செயலாளர் ஜாஃபர் அலி, பொருளாளர் ரவி, எழுத்தாளர் பா. அமிர்தம், முதலிய நண்பர்கள் அந்த அதிகாலையிலும்சிரமத்தைப்பாராமல் வரவேற்க வந்திருந்தார்கள். வெளியே வெப்பம் தெரிந்தது

# இளைஞர்கள்

பாம்—பீச் ஹோட்டலில் போய் செக்—இன் செய்துவிட்டுமறுபடிகிருஷ்ணஸ்வாமி வீட்டிற்குப் போய்க் காலைச் சிற்றுண்டியை முடித்துத் திரும்பினேன். யு. எ. இ. பற்றிய பல விவரப் புத்தகங்களை ஜாஃபர் அறையில் கொண்டுவந்து படிக்கக் கொடுத்தார். அவற்றைப் புரட்டத் தொடங்கினேன்.

யு. எ. இ. எனப்படும் ஐக்கிய அரபுக் கூட்டாட்சியில் அபுதாபி, துபாய், ராஸல் கேமா, உம்ம்ல்கைவான், பியுஜிரா, ஷார்ஜா, அஜ்மான், ஆகிய ஏழு எமிரேட்டுகள்

## —நா. பார்த்தசாரதி

அடங்கியுள்ளன. இவை தவிர, ஓமன், குவைத், பாஹ்ரைன், க்வட்டார், சௌதி அரேபியா, ஆகியவை வளைகுடா நாடுகள் எனப்பட்டன. ஐரோப்பிய நாடுகளிடையே எப்படி 'ஈ ஈஸி' இருந்ததோ அதைப் போல இவர்களிடையே ஜி. ஸி. ஸி. — கல்ஃப் கோ— ஆபரேஷன் கவுன்ஸில்-என்ற கூட்டமைப்பு இருந்தது. சௌதி, யு. எ. இ., பஹ்ரைன், குவைத், ஓமன், ஆகியநாடுகளிடையே இக்கவுன்ஸில் இயங்குகிறது. நிறைய இந்தியர்கள் — குறிப்பாகத் தமிழர்களும், மலையாளிகளும் இப்பகுதியில்வேலைபார்க்கிறார்கள். ஒரு தியேட்டரில் அதிக நாள் தொடர்ந்து மலையாளப்படம் ஒன்று ஓடுகிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

வீடுகள், ஹோட்டல் அறை, கார் எல்லாம் ஏ. சி. செய்யப்பட்டிருந்தன. 'துபாய் முழுவதும்' கடைகள் சூப்பர் மார்க்கெட்டுகளில் ஜப்பானியப் பண்டங்கள் குவிந்து கிடந்தன. அல்குரயர், கலதாரியா, போன்ற சூப்பர் மார்க்கெட் கட்டிடங்களில் செயற்கையாகப் பனியை உறைய வைத்துப் பனிச் சறுக்கு விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். டிரேட் செண்டர் என்ற உயரமான கட்டிடம் எங்கிருந்து பார்த்தாலும் தெரிகிற வகையில் எடுப்பாகக் கட்டப்பட்டிருந்தது. வளைகுடா நாடுகளிலும் யு. எ. இ. யிலுமே அதுதான் உயரமானகட்டிடம்என்று சொன்னார்கள்.

நான் துபாய் போய்ச்சேர்ந்ததினத்தன்று எமிரேட் தமிழ்ச் சங்க செயற்குழு உறுப்பினர்கள் அனைவரும் சந்தித்து அளவளாவினார்கள். பின்பு ஓர் தமிழன்பர் வீட்டில் நடந்த ஆடிக் கிருத்திகை வழிபாட்டுக்கு நண்பர்கள் ரவியும், ராமானுஜமும் அழைத்துச் சென்றார்கள். இருபது முப்பது குடும்பத்தினர் சேர்ந்து பூஜை நடத்தியது, தோத்திரப் பாடல்களை உள்ளமுருகப் பாடியது, சேர்ந்து உண்டது, எல்லாம் கலாசார ஒற்றுமையைக் காட்டின.

மறுநாள் என் பழைய நண்பர் வாசு அவரது வீட்டிற்குப் பகலுணவிற்கு அழைத்திருந்தார். 1976—ல்நான் ஐரோப்பியப் பயணம்



* துபாய் நகர்.

முடிந்து திரும்புகையில் அப்போது குவைத்தில் இருந்த இவரோடு ஒரு வாரம் தங்கியிருந்தேன். இப்போது அவர் துபாயிலிருப்பதாகக் கூறி என்னை விருந்துக்கு அழைத்தபோது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

கலீஜ் டைம்ஸ், கல்ஃப் நியூஸ், எமிரேட் நியூஸ் ஆகிய மூன்று பத்திரிகைகளின் நிருபர்களும், புகைப்படக் காரர்களும் வந்திருந்தார்கள். இலக்கிய — கலாச்சாரக் கேள்விகள் கேட்கப்பட்டன. பத்திரிகைகளில் பேட்டியைப் பார்த்துவிட்டு அந்த அலுவலகங்களுக்கு ஃபோன் செய்து கேட்டவர்களுக்கு எல்லாம் ஹோட்டல் முகவரியைக் கொடுத்துவிட்டார்கள் அவர்கள். ஒரு வாரத்தில் சமாளிக்க முடியாது என்கிற அளவு அழைப்புக்களும், டெலிஃபோன் கால்களும், திணற அடித்தன. துபாய் எலெக்ட்ரிஸிடி ஸ்டேஷன் உள்ள ஜபலாலி' என்ற இடத்துக்கு ஒரு மாலையில் போய் வந்தோம். சில ஆண்டுகளுக்கு முன்பு வரை கூட நெய்வேலியில் இருந்த பல மின்சார இன்ஜினியர்களை இப்போது ஜபலாலியில் சந்திக்க முடிந்தது.

ராஸல் கேமா தமிழ் அன்பர்களைச் சந்தித்து அவர்களோடு கலந்துரையாட வர வேண்டும் என்று அவர்கள் சார்பில் வாஞ்சிநாதன் என்ற தமிழன்பர் வற்புறுத்தினார். அங்கு ஒரு 'சிமெண்ட்' தொழிற்சாலை இருந்தது. அதில் பல தமிழர்கள் வேலை பார்த்து வந்தார்கள். ஓர் அதிகாலையில் புறப்பட்டு ராஸல்கேமா சென்றோம். வரவேற்பு, பேச்சு கேள்வி பதில் என்று பகல் வரை ராஸல் கேமாவில் கழிந்தது. காலைச் சிற்றுண்டியோடு வரவேற்ற வாஞ்சிநாதன் பகல் உணவை முடித்த பின்பே விடை கொடுத்தார். பாலைவனச் சாலைகளில் ஒட்டகங்கள் குறுக்கிட்டால் மெதுவாக ஓட்ட வேண்டுமென்றார் எங்கள் காரை ஓட்டி வந்த ரவியின் இளைய சகோதரர் ராஜா. ஏன் என்றேன்.

"இங்கு ஒட்டகத்துக்கு ஏதாவது நேர்ந்தால் — அப்படி நேர்கிற விதத்தில் காரை ஓட்டியவர்தான் அபராதம் கட்ட வேண்டும். ஒட்டகம் மரியாதைக்குரிய தேசிய விலங்கு" — என்றார் ராஜா. சாலையிலேயே பல இடங்களில் அதை அறிவிக்கும் அறிவிப்புக்கள் எழுதப் பட்டிருந்தன. திரும்புகிற வழியில் அஜ்மான் கடற்கரை, ஷார்ஜா, ஆகிய எமிரேட்டுகளைச் சுற்றிப் பார்த்தோம். பேரீச்சை மரங்கள் அஜ்மானில் நிறைய இருந்தன.

எமிரேட் தமிழ்ச் சங்க வரவேற்பு — அன்றிரவு பாம் — பீச் ஹோட்டல் ஆடிட்டோரியத்தில் நிகழ்ந்தது. தமிழக எழுத்தாளர் பி.ச. கைலாசம் (அப்போது துபாயில் உத்தியோகத்தில் இருந்தார்) தொடக்கவுரையாற்றினார். நான் சிறப்புரையாற்றிக் கேள்விகளுக்குப் பதிலளித்தேன். செயலாளர் ஜாஃபர் அலியின் பொறுப்பில் இருந்த எமிரேட் தமிழ்ச்சங்கம், அன்வர், காமராஜ் ரவி, ஷேக் அலி, ஆகியோருடன் என் வரவைப் பயன்படுத்தி நடத்திய விழா மிகவும் சிறப்பாக அமைந்து புகழ் பெற்றது. மறு நாள் துபாய் டி.வி.யில் செய்தி வாசிக்கும் ராஜு நாகராஜனைச் சந்தித்து உரையாட முடிந்தது. நான் ஊர் திரும்ப இன்னும் ஒரே ஒரு நாள்தான் மீதமிருந்தது. ஏர் இந்தியா அலுவலகம் சென்று துபாய் — பம்பாய் — சென்னைப் பயணத்தை உறுதிப்படுத்தினேன்.

வழியனுப்ப வந்திருந்த நண்பர்களோடு — இரவு பதினொரு மணிக்கு ஜே, ஜே என்றிருந்த துபாய் விமான நிலையத்தில் போய்ப் பார்த்தால் அன்று ஏர் இந்தியா விமானம் புறப்படாது என்பது போல அறிவிப்பு இருந்தது. எனக்கு ஒரே அதிர்ச்சி. இரண்டு மாதக் காலத்தில் லுப்தான்ஸா முதல் ஆஸ்திரியன் ஏர் வேஸ் வரை எங்கும் இப்படி நேர்ந்ததில்லை. என் விஸா துபாயில் அன்றிரவு 12 மணியுடன் முடிந்து விடுகிறது. மறுபடி ஊருக்குள் நான் போக முடியாது. நடு இரவில் புது விஸா வாங்குவதும் சிரமம். நல்லவேளையாக அப்போது பம்பாய் புறப்பட இருந்த "காதே பஸிஃபிக்" விமானத்தில் எப்படியோ தம் செல்வாக்கைப் பயன்படுத்தி கே.எல்.எம்.கிருஷ்ணஸ்வாமி எனக்காக ஓர் இடத்தைப் பிடித்துக்கொடுத்து என்னைத் தர்ம சங்கடத்திலிருந்து காப்பாற்றிவிட்டார்.

* * * * *

**ஏழு நாடுகளில் எட்டு வாரங்கள் சுற்றிவிட்டுத் தாய் நாடு திரும்பிச் சென்னையை அடைந்த முதல் மாலை வேளையே மிகவும் இரம்மியமாகவும் சுகமாகவும் இருந்தது. பிரிந்து நெடுந் தொலைவு போய் விட்டு மறுபடி திரும்பும்போது எவ்வளவுதான் சிரமங்கள் உள்ள தாய் நாடாயிருந்தாலும் அதன் மேல் மனத்தில் பொங்கும் பாசவுணர்வைச் சொல்லி முடியாது. நானும் அன்று மாலை அந்தப் பாசத்தில் தான் திளைத்தேன்.**

(நிறைகிறது)

**படங்கள்:**

**அப்போலோ ஸ்டுடியோ, துபாய்.**

காதலி: நீங்க நம்ம கல்யாணத்துக்கு ஒத்துக்கலேன்னு நான் தற்கொலை செய்துக்குவேன்...

காதலன்: முன்னே அதை செய்... கல்யாணத்தை பத்தி அப்பறம் யோசிக்கலாம்!





# டபுள் செஞ்சுரி நாட் அவுட்

**கே. ஆர். விஜயா**

தி. நகர் ராமன் தெருவில், பிரம்மாண்டமான வீடு. பச்சை பசேலென்ற புல் வெளி; மீன்கள் துள்ளி விளையாடுகிற குளங்கள்; வண்ண மயமான செடிகள்; நடுவிலே நீச்சல் குளம். விசாலமான வரவேற்பறை. கே. ஆர். விஜயா வரவேற்கிறார், தமக்கே உரிய புன்னகையுடன்.

உடன் வந்திருந்த போட்டோகிராபரின் வேண்டுகோளை ஏற்றுவிதம்விதமாய்புடவையணிந்து வந்து, வெண் பற்கள் காட்டிச் சிரிக்க, போட்டோகிராபர் 'இன்னும்ஒன்று; இன்னும் ஒன்று..' என்று 'கிளிக்' பண்ணிக் கொண்டே போகிறார். ஒரு வழியாக அவர் பணி முடிந்ததும் பேட்டி ஆரம்பமாகிறது:

''உங்களுடைய சின்ன வயசு பற்றிச் சொல்லுங்கள்...''

''அப்பா ராமச்சந்திரன் ராணுவத்தில் இருந்தார். அம்மா பேர் கல்யாணி. என் மாமாக்கள் எல்லாம் ஆர்மி, ஏர்ஃபோர்ஸ் என்று இருந்தவர்கள். சொந்த ஊர் கேரளாவில் திருச்சூர். நிலமெல்லாம் உண்டு. ஏழெட்டு வயசு முதலே அமெச்சூர் நாடகங்களில் நடிக்க ஆரம்பித்துவிட்டேன்.''

''குடும்பத்தில் ஆண்கள் அனைவரும் ராணுவத்தில் இருந்தார்கள் என்றால், நீங்கள் நடிப்புத் துறைக்கு வந்தது ஆச்சர்யமாய் இருக்கிறதே. அதெப்படி டிராமாவில் நுழைந்தீர்கள்?''

''என் அம்மா மலையாளம்; அப்பா தெலுங்கு. சித்தூர்க்காரர். நடிகர் நாகையா எங்க வீட்டுக்குப் பக்கத்தில் இருந்தார். அப்பாவும் சிறு வயசில் நடித்திருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எப்படி நாடகத்தில்நுழைந்தேன் என்றுகுறிப்பிட்டுச் சொல்ல எதுவும் என் ஞாபகத்தில் இல்லை. நடிக்கச் சொன்னார்கள்; நடித்தேன். சொன்னதைச் சரியாகச் செய்யவில்லையெனில், அடி, உதைதான் கிடைக்கும். அந்த நாட்கள் பற்றி எனக்கு இவ்வளவுதான் நினைவிருக்கிறது.''

''சினிமாவுக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்?''

''1963-ம் வருஷம். ஒரு கம்பெனியின் காலண்டரில் என் படம் வந்திருந்தது. தெரிந்த போட்டோகிராபர் என் படத்தைக் காலண்டருக்குக் கொடுத்திருந்தார். அந்தச் சமயத்தில், டைரக்டர் கே. எஸ். ஜி. சார் தம் படத்துக்காக ஒரு புதுமுகம் தேடிக் கொண்டிருந்தார். தற்செயலாய்க் காலண்டரில் என் படத்தைப் பார்த்துவிட்டு விசா

### கே. ஆர். வி பற்றி கே. எஸ். ஜி.



''ஒரு கலைஞரோட முதல் படம், 100 வது படம், 200 வது படம் மூன்றையும் இயக்குகிற வாய்ப்பு ஒரு டைரக்டருக்குக் கிடைப்பது அபூர்வம். இதையே திருப்பிப் போட்டால் அதுவும் உண்மையாகவே இருக்கும். இந்த அரிய வாய்ப்பு எனக்கும், விஜயாவுக்கும் கிடைத்திருப்பது ஆச்சர்யம்.

விஜயாவை, ஏழ்மையில் — சாப்பாட்டுக்கே கஷ்டப்பட்ட நாட்களிலும் நான் பார்த்திருக்கிறேன். கோடீஸ்வரருக்கு வாழ்க்கைப்பட்டு, செல்வத்தில் மிதக்கிற பெண்மணியாகவும் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அன்றைக்கு இருந்த அதே பணிவு; அடக்கம்.

இன்றைக்குச் சினிமாத் துறையில் 'குருபக்தி' அநேகமாய் இல்லாமலே போய்விட்டது என்று சொல்லலாம். ஆனால் விஜயாவிடம், அன்றைக்கு இருந்த குருபக்தி இன்றைக்கும் துளிக்கூடக் குறையவில்லை.

அந்தப் பொண்ணு (டைரக்டர் கே. எஸ். ஜி; அப்படித்தான் விஜயாவைக் குறிப்பிடுகிறார்) 200 இல்லை; 300, 400 படங்கள் பண்ணணும்; நல்லா இருக்கணும்; ஆண்டவன் இதற்கு அருள் புரியணும்; என் மனப் பூர்வமான வாழ்த்துக்கள்.

ரித்து, என்னைக் கூப்பிட்டனுப்பினார். போனேன். நடித்துக் காட்டினேன். அவர் சில வசனங்கள் தந்து பேசச் சொல்ல, பேசினேன். அவருக்குப் பூரண திருப்தி. படத்தில் நடிக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்து விட்டது.''

''முதல் படத்தில் நடிக்கும் போது ரொம்பப் பயமாய் இருந்ததா?''

''காமிரா பயமெல்லாம் துளியும் இல்லை. எனக்கு என் மேடை அனுபவம் ரொம்பக் கைகொடுத்தது. ஜெமினி, சாவித்திரி, எல்லோரும் எப்படி நடிக்கிறார்கள் என்று கூர்ந்து கவனித்துக் கொண்டேன்; நடித்தேன். எல்லோரும் ரொம்பவும் என்னை உற்சாகப்படுத்தினார்கள். சினிமாவில் நடிக்க ஆரம்பித்த பிறகும், நாடகங்களில் நடித்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் மாலை டிராமா இருந்தது; ஷூட்டிங் முடியவில்லை. டைரக்டரிடம் 'டிராமா இருக்கிறது; போக வேண்டும்' என்ற போது, 'அது, இது இரண்டையும் வைத்துக் கொள்ளாதே! உனக்கு நாடகம் முக்கியமா? சினிமா முக்கியமா?' என்று கேட்க, நான் அன்று முடிவு செய்தேன். 'இனி மேல் நமக்குச் சினிமாதான்' என்று. அப்புறம் மேடைப் பக்கமே போகவில்லை!''

''நீங்கள் உங்கள் திரைப்பட வாழ்க்கையில் பல வித ரோல்களில் நடித்திருக்கிறீர்கள்! அவற்றில் மறக்க முடியாத ஒரு சில பாத்திரங்கள் பற்றி...?''

''கற்பகம் படத்துல நான் பண்ணின ரோல் ரொம்பப் பிடிச்சது. அப்புறம்.... 'இதயக் கமலம்' படத்தில் என் பாத்திரம். அதுல வம்பாடிப் பெண்ணாகவும், குடும்பப் பெண்ணாகவும் எனக்கு இரட்டை வேடம் ரொம்ப ஒன்றிப் போய் நடிச்சேன். அருமையான டயலாக்குகள். பின்னால வந்த படங்களில், எனக்கு ரொம்பப் பிடிச்சது 'தீர்க்க சுமங்கலி' படத்தில் பண்ணின ரோல். ரொம்ப நல்ல கதை; நல்ல குடும்பத்துக்கு இலக்கணம் என்னன்றதை ரொம்ப அழகாச் சொன்னாங்க... தீர்க்கசுமங்கலியும் என்னால மறக்க முடியாது!''


''தெய்வமாக நடிப்பதைக் கேலி செய்கிறார்கள்...''

''எப்போதும் உங்கள் மார்க்கெட்டை எப்படி ஸ்டெடியாக வைத்திருக்க முடிகிறது உங்களால்?''

(லேசாய்ச் சிரித்துவிட்டு) ''என்னைக் கேட்டால் இதற்குக் காரணம் 'அதிர்ஷ்டம்'னு தான் சொல்லுவேன்.''

''அதிர்ஷ்டம் மட்டும்தானா?''

''ம்...ம்... ஆண்டவனின் அருளும், பெரியவங்க ஆசீர்வாதமும், ரசிகர்களோட ஆதரவும்தான். இன்னும் சொல்லணும்னா, நான், கண்ணியமான பாத்திரங்களாகத் தேர்ந்தெடுத்து நடிப்பது, கதையைக் கேட்டு ஒப்புக் கொள்வது, பெரிய டைரக்டர்களாக அமைந்தது இவையெல்லாமும் உதவியிருக்கு. அதனாலதான் நான் நடித்த பல படங்கள் (கந்தன் கருணை, சரஸ்வதி சபதம் என்று லிஸ்ட் தருகிறார்.) இன்னும் பசுமையாய் நினைவில் நிற்கின்றன.''

''உங்கள் திரையுலக வாழ்க்கையில் பல லட்சங்களைப் பார்த்துவிட்டீர்கள். ஆனால் லட்சியங்கள் நிறைவேறிவிட்டனவா?''

''லட்சங்களை லட்சியம் என்று நான் இருந்ததே இல்லை. நல்ல கதையம்சமுள்ள படங்களில் நடிக்க வேண்டும்; ரசிகர்கள் மனத்தில் —குறிப்பாய்ப் பெண்கள் மனத்தில் ஒரு நிரந்தர இடம் பெற வேண்டுமென்பதுதான் என் லட்சியம், ஆசை எல்லாம். அது எந்த அளவுக்கு நிறைவேறியுள்ளது என்று என்னை விட நீங்களே சொல்வதுதான் நன்றாக இருக்கும்.''

''உங்கள் இளமையின் ரகசியம் என்ன? உணவு விஷயத்தில் ரொம்பக் கட்டுப்பாட்டைக் கடைப் பிடிப்பீர்களோ?''

''உணவு விஷயத்தில் கட்டுப்பாடா...? சேச்சே! அதெல்லாம் துளியுமில்லை. வயிற்றுக்கு வஞ்சனையே பண்ண மாட்டேன். இத்தனை கஷ்டப்பட்டு, சம்பாதிப்பதெல்லாம் நிம்மதியாய்ச் சாப்பிடத்தானே! அதைப் போய்க் குறைப்பானேன்? காலையில் சில நாள் சாப்பிடுவேன்; சில நாள் சாப்பிட மாட்டேன். மத்தியானம் நல்லாவே சாப்பிடுவேன். சாதம், காய்கறி என விதம் விதமாய் வேண்டும். தினமும் நான்—வெஜிடேரியன் இருக்க வேண்டும் என்கிற கட்டாயமில்லை. இரவு லைட்டாய்ச் சாப்பிடுவேன். சில சமயம் உடம்பு குண்டாகிவிடும். அப்போ அடுத்தவங்களைப் பார்த்தால், சிரிக்கக் கூடத் தோன்றாது! ஒரே சீரியஸாக இருப்பேன். அதுமாதிரி

சமயங்களில், ரொம்ப முரட்டுத்தனமாய் எக்ஸர்ஸைஸ் பண்ணி, உடம்பைக் குறைப்பேன். எடை குறைந்ததும் மறுபடி சந்தோஷமாய் இருப்பேன். சிரித்துப் பேசுவேன்... மகிழ்ச்சியாக இருப்பதுதான் இளமைத் தோற்றத்துக்கு முக்கிய காரணம். இது எல்லாருக்குமே பொருந்தும்.''

**''இன்றைக்கு வருகிற புதுமுகங்களில் பலர் ஒரு சில ஆண்டுகள்... அது கூட தப்பு... ஒரு சில படங்கள் வரை கூட நிலைப்பதில்லையே?''**

''என்னிடமுள்ள ஒரு குணம் அது நல்ல குணமோ, கெட்ட குணமோ எனக்குத் தெரியாது — இன்னொரு ஆர்ட்டிஸ்ட் ஏன் நிலைக்கலே, அவர்களைப் பத்தி ஏதாவது வம்பு உண்டான்னு அலையறது கிடையாது. நான் உண்டு; என் வேலை உண்டு என்று இருப்பேன். இந்தக் கேள்விக்கு என் பதில் இவ்வளவுதான்.''

**''நிறையப் புராணப்படங்களில் மீனாட்சி, காமாட்சி, கருமாரி அம்மன் போன்ற பாத்திரங்களில் நடித்து வருகிறீர்களே! இதுபற்றி...?''**

''எனக்குத் தெய்வ பக்தி அதிகம். அந்த மாதிரி சுவாமி ரோல்களில் நடிக்கும்போது ரொம்ப ஹாப்பியாக இருக்கும். சினிமா நடிகைகள் தெய்வங்களாக நடிப்பதைப் பற்றிக் கேலியாய்ச் சிலர் பேசுகிறார்கள். 'கடவுளையே கேலி செய்கிறவர்கள் இருக்கும்போது கடவுள் வேடத்தில் நடிப்பவர்களையா கேலி செய்யாமல் இருப்பார்கள்?' என்று நினைத்துக் கொள்வேன். லட்சியம் பண்ண மாட்டேன்.''

**''நீங்க இருநூறு படங்களில் நடிச்சிருக்கீங்க; பல நடிக, நடிகையரோட நடிப்பைப் பார்க்கறீங்க. ஆனால் 'இதுதான் நடிப்பு; இதுதான் நடிப்பின் இலக்கணம்'னு எதைச் சொல்லுவீங்க?''**

''ரொம்பப் பெரிய கேள்வியாக் கேட்டுட்டீங்க! இதற்குப் பதில் சொல்லற தகுதி எனக்கு எந்த அளவுக்கு இருக்குன்னு எனக்குத்தெரியலே. என்னைப்பொறுத்தவரையில், சூழ்நிலைக்கேற்ப முகபாவங்களையும், உணர்ச்சிகளையும் கொட்டறது, கேரக்டரோட ஒன்றி நடிக்கறது இதுதான்னு நினைக்கிறேன்.''

**''உங்கள் குடும்ப வாழ்க்கை பற்றிச் சில கேள்விகள் கேட்கிறேன். உங்கள் திருமணம் காதல் திருமணமா?''**

''ஆமாம்! பாலாஜி சார் எடுத்த ஒரு படத்துக்கு இவர் ஃபைனான்சியர். நான் ஹீரோயின். அப்பதான் முதன் முதலில் நாங்க இரண்டு பேரும் சந்திச்சோம். இரண்டு பேருக்கும் ஒருவரை ஒருவர் பிடித்துப் போனது. சுமார் ஒன்னரை வருடம் கழித்துத் திருமணம் பண்ணிக் கொண்டோம். எங்களுக்கு ஒரே பெண். காலேஜில் படிக்கிறாள். எங்கள் திருமணத்துக்குப் பெரிய எதிர்ப்பு ஒன்றுமில்லே; சந்தோஷமான குடும்பமாய் வாழ்கிறோம்.''

**''திருமணமான நடிகையின் வாழ்க்கை கத்திமேல் நடப்பது போல. திருமணமானதும் ஒன்று நடிப்பதை**


• ''ரொம்பப் பிடிச்சது'' (கற்பகம்)


• ''நினைவில் நிற்பது... தீர்க்கசுமங்கலி''

**விட்டு விடுகிறார்கள்; அல்லது பாப்புலாரிட்டி குறைந்து திரை உலகு இவர்களை விட்டு விடுகிறது. இவ்வாறு இல்லாமல் தொடர்ந்து நடித்தாலோ குடும்பத்தில் மனக்கசப்பு... பிரிவு, டைவர்ஸ்... என்று முடிவதுண்டு. நீங்கள் இந்தப் பிரச்னையை எப்படிச் சமாளித்தீர்கள்?''**

''உடைசல் உரசல் இல்லாத சந்தோஷமான எங்கள் குடும்ப வாழ்க்கைக்கு ஒரே ஒரு அடிப்படையான காரணம் தான் உண்டு. அதுதான் ஒருவரை ஒருவர் பரிபூரணமாய்ப் புரிந்துகொண்டு, அட்ஜஸ்ட் செய்து கொண்டு போவது. திருமணமானதும், 'தொடர்ந்து நடிக்கவா?' என்று என் கணவரைக் கேட்டேன். 'சரி, நடி' என்றார். நடித்தேன். குழந்தை உண்டானதும், மறுபடி 'நடிப்பதா?' என்றேன். 'குழந்தை பிறந்ததும் முடிவு செய்யலாம். அதுவரை நடி' என்றார். குழந்தை பிறந்தபின் கேட்டேன். 'நீ வீட்டில் இருந்தாலும் வேலை செய்யப் போவதில்லே; நமக்குத்தான் நிறைய ஆட்கள் வேலை செய்ய இருக்கிறார்கள். வீட்டில் உனக்கும் போரடிக்கும். நீ நடிப்பதில் எனக்கு எந்தவித அப்ஜக்ஷனும் இல்லே' என்று சொல்லிவிட்டார்.''

## விஜயா – சில விஷயங்கள்

- இதுவரை கே. ஆர். விஜயா நடித்துள்ள படங்கள்: தமிழ் — 138; மலையாளம் — 42; தெலுங்கு — 24; கன்னடம் — 2.
- விஜயாவுக்குப் "புன்னகை அரசி" பட்டம் தந்தவர்கள் "திருச்சி ரசிகர்கள் சங்கம்".
- சிவாஜியுடன் 37 படங்களில் கே. ஆர். விஜயா நடித்திருக்கிறார்.

தகவல்: பிலிம் நியூஸ் ஆனந்தன்

**"பொதுவாக ஒவ்வொரு வெற்றி பெறுகிற ஆணின் பின்னாலும் ஒரு பெண் இருப்பாள் என்பார்கள். உங்கள் விஷயத்தில் உங்களுடைய வெற்றிக்குப் பின்னால் இருக்கும் ஆண்?"**

"பின்னால், முன்னால், பக்கத்தில் எல்லாம் இருப்பவர் என் கணவர் ஒருவர்தான். நான் என்ன விஷயமானாலும் அவரைக் கலந்து ஆலோசிக்காமல் செய்ய மாட்டேன். எனக்கு எது நல்லது; எது வேணும்னு அவருக்குத் தெரியும். அவர் கோடுபோட்டு, 'அதைத் தாண்டாதே'ன்னு சொன்னா, அந்தக் கோட்டை ஒருபோதும் நான் தாண்டவே மாட்டேன்."

**"நீங்க சுமார் 20 வருஷமா ஃபீல்டுல இருக்கீங்க. எப்பவாவது 'ஏண்டாப்பா சினிமா ஃபீல்டுல நுழைஞ்சோம்'னு வருத்தப்பட்டதுண்டா?"**

"ஒரு தடவை கூட வருத்தப்பட்டதில்லே. ஆனால், சந்தோஷப்பட்டிருக்கேன், பல சமயம். குறிப்பா, கோவில்களுக்குப் போகும் போது நிறைய நேரம் தரிசனம் பண்ணுகிற வாய்ப்பு கிடைக்கும். அப்போதெல்லாம், 'நாம சினிமா ஸ்டாரா இருக்கறதாலதானே இவ்வளவு ஸ்பெஷல் மரியாதை' என்று சந்தோஷப்பட்டுக் கடவுளுக்கு நன்றி சொல்லியிருக்கேன்!"

**"ஷூட்டிங்கில் பிரேக் கிடைக்கும்போதும், ஷூட்டிங் இல்லாத நாட்களிலும் எப்படி பொழுதைக் கழிப்பீர்கள்?"**

"ஷூட்டிங்கில், ப்ரேக் கிடைத்தால், கூட நடிப்பவர்களிடம் அப்போது வெளியான படங்கள் பற்றி, அவுட்டோர் போன அனுபவங்கள் பற்றி, பேசுவேன். முக்கியமான உலக நடப்புகள் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்வேன். எனக்குப் பேப்பரெல்லாம் பார்க்கிற பழக்கமில்லே. வீண் வம்பு பேச மாட்டேன். ஷூட்டிங் முடிந்து ஆறு மணிக்கு வீடு வந்ததும், குளித்துவிட்டு, ஸ்டோரி டிஸ்கஷனுக்கு யாராவது வந்திருந்தால் பேசுவேன். டி. வி. பார்ப்பேன், வீடியோவில் அல்லது வீட்டிலுள்ள தியேட்டரில் சினிமா பார்ப்பேன். ஞாயிற்றுக்கிழமைகளில், கண்டிப்பாகக் குடும்பத்துடன் 'அவுட்டிங்' போய் விடுவேன். எங்கள் தோட்டத்துக்குப் போவோம். அங்கே தோட்ட வேலே, சைக்கிள் விடுதல், ஏதாவது விளையாட்டுகள் என்று பொழுதைக் கழிப்போம். பக்கத்திலுள்ள திருவேற்காடு முதல் தூரத்திலுள்ள கொல்லூர் மூகாம்பிகை கோவில் வரை எல்லாக் கோவில்களுக்கும் அடிக்கடி போவேன். அதிலே உண்டாகிற மன நிறைவு வேறு எதிலும் கிடைக்காது."

**"உங்கள் பெண் சினிமாவில் நடிக்க நீங்கள் அனுமதிப்பீர்களா?"**

"என் பொண்ணு சினிமால வந்தா, என்னைவிடப் பெரிய ஸ்டாரா நிச்சயம் வர முடியாது. அது எதுக்கு? சினிமால நுழையாமலேயே இருந்திடறது நல்லது."

**"நீங்க அப்படி எப்படிச் சொல்லலாம்? சிவாஜி அளவுக்கு யாராலும் வர முடியாது. ஆனாலும் பிரபு சினிமால நடிக்கலியா? முத்துராமன் நல்ல ஆர்ட்டிஸ்ட். கார்த்திக் சினிமால நடிக்கலியா? பாலையாவோட சன் கூட சினிமாக்கு வந்தாச்சே! அப்படி இருக்கும் போது....?"**

"சினிமாங்கறது எவ்வளவு கவர்ச்சியோ அதே அளவு ரிஸ்க்கானதும் கூட. ஷூட்டிங் போறது, நடிக்கறது எல்லாம் சுலபமான காரியமில்லே. நான் சின்ன வயசிலேர்ந்தே இப்படியே வளர்ந்துட்டேன். என் பொண்ணு அப்படி இல்லே. ரொம்ப செளகரியமாய் வளர்ந்தவள். அவளுக்கு இந்த மாதிரி விஷயங்களில் துளிக்கூட இன்ட்டரஸ்ட் இல்லே. நான் அவளை ஷூட்டிங்குக்கெல்லாம் அழைச்சுக்கிட்டுப் போவதில்லே. அவளும் வரமாட்டா, பத்திரிக்கைகளில்கூட என் பெண்ணைப் பற்றிப் படமோ, மற்ற விவரங்களோ வருவதை நாங்கள் விரும்பலே. அது அநாவசியமா அவளுடைய 'பிரைவஸி'யை, சுதந்திரத்தைப் பாதிக்கும். ஜாலியா ஃப்ரெண்ட்ஸ் கூட நாலு இடம் போக முடியாது. பஸ்ல ஒருநாள் பிரயாணம் பண்ண முடியாது. இதெல்லாம் எதுக்கு?"

**"நீங்க மேல்நாட்டில் பிறந்திருந்தால் உங்கள் புன்னகை பத்து லட்சம் டாலருக்கு இன்ஷூர் செய்யப்பட்டிருக்கும்...! இங்கே?"**

"அந்த மாதிரி ஒரு அழகான புன்னகையை எனக்கு ஆண்டவன் கொடுத்திருப்பது நான் செய்த புண்ணியம். அதைத் தவிர வேற என்ன பதில் சொல்லறதுன்னு எனக்குத் தெரியலீங்க" என்று சொல்லிவிட்டு, டிபிகல் விஜயா பிராண்ட் புன்னகை செய்தார், கே. ஆர். விஜயா.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி.**

வண்ணப்படம்: **யோகா.**

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Editor: K. Rajendran

Assistant Editor: P. S. Mani

